Registered No. M. 2330

'SIDDHANTHAM
Vol. 33—No. 12



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 33 | சார்வரி மார்கழி 1960 டிசம்பர் | இதழ் 1

உள்ளுறை



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்

14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அண

## சமாஜப் பொதுக்கூட்டம்

சென்னை இராயப்பேட்டை, ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையில் 24–12–'60 சனிக்கிழமை காலை 9 மணிக்குச் சமாஜ ஆண்டு அறிக்கையையும், இவ்வாண்டு வரவு செலவுக் கணக்கையும் ஆமோதிக்க நடைபெறும். அக்கூட்டத்திற்கு அங்கத்தினர் நிறைவெண் (Quorum) இல்லாவிடில் மேற்படி விஷயங்களை ஆமோதிக்க மேற்படி இடத்திலேயே மறுநாள் 25–12–'60 ஞாயிறு காலை அதே நேரத்தில் சமாஜ விதிகளின்படி, வருபவர்களைக் கொண்டு அக் கூட்டம் நடத்தப்படும்.

——

## செய்திச் சுருக்கங்கள்

பாராட்டு விழா : 22-11-60 செவ்வாய்க்கிழமை மாலை சென்னை, தியாகராயநகர்த் தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையத்தின் சார்பில், அண்மையில் மலேயா முதலிய வெளி நாடுகள் சென்று சைவசமயச் சொற்பொழிவுகள் ஆற்றித் திரும்பிய தருமையாதீனப் புலவர் பாலகவி - வயிநாகரம் - திரு. இராமநாதஞ் செட்டியார் அவர்களுக்குச் சைவப்பெரியார் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் தலைமையில் பாராட்டு விழா ஒன்று சிறப்புற நடத்தப்பெற்றது. அதுபோது, திருவாசகமணி கே. எம். பாலசுப்பிரமணியம், திரு. ச. சிவ குமாரனர், எம்.ஏ., புலவர் முருகவேள் ஆகியோர் திரு. பால கவி அவர்களின் சிரிய புலமையினையும் செந்தமிழ்ச் சிவத் தொண்டுகளையும் குறித்துப் பாராட்டிப் பேசினர். பின் னர்த் திரு. பாலகவி அவர்கள் தமது மலேயா அனுபவங் களைக் குறித்துச் சுருக்கமும் இனிமையும் அமையப் பேசித் தக்கவாறு பாராட்டுதல்களுக்குப் பதிலளித்தார்கள். தலைவர் அவர்களுடைய முடிவுரைக்குப் பின்னர்த் திருக் கடவூர்க் கார்த்திகைச் சோமவாரப் பிரசாதம் அனைவர்க் கும் வழங்கப்பெற்று விழா இனிது நிறைவேறியது.

மாதாந்தர வழிபாடு: தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையத்தின் சார்பில் மாதந்தோறும் வழக்கமாக நடை பெற்றுவரும் வழிபாட்டுக் கூட்டம், இம்மாதம் 11-12-60 ஞாயிறன்று திருக்காளத்தியில் நடைபெற்றது. நமது சைவ சித்தாந்த மகா சமாஜம் போன்ற சமய சபைகள் பலவும் வழக்கம்போல இவ்வழிபாட்டுக் கூட்டத்திற் கலந்து கொண்டன.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சைவ சித்தாந்த மகா சமாஜம், சென்னை

[பதிவு செய்யப்பெற்றது]

---

# 55-ஆம் ஆண்டுவிழாவும் மாநாடும்

இடம்: திருக்கேதீச்சரம் (இலங்கை)

நாள்: **30, 31-12-60, 1-1-61**

---

# அறிக்கையும் அழைப்பும்

---

"ஞாலம் நின்புக ழேமிக வேண்டும்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே!"

பேரன்புடையீர்!

உலகம் யாவும் செந்நெறியே திகழ ஆலவாயண்ணல் புகழைப் பரப்பும் நமது சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் **55**-ம் ஆண்டு நிறைவு விழாவும், அதன் அங்கமாகச் சைவர், சைவ இளைஞர், சைவ மங்கையர் மாநாடுகளும் நிகழ் சார்வரி ஆண்டு மார்கழித் திங்கள் 16-ஆம் நாள் (30—12—1960) வெள்ளிக்கிழமை முதல் மூன்று நாட்கள் **திருக்கேதீச்சரத்தில், திருக்கேதீச்சர ஆலயத்தில்** பின்வரும் நிகழ்ச்சி முறைப்படி நடைபெறும்.

சைவ சித்தாந்த மகா சமாஜத்திற்குக் கட்டிடம் வாங்க ரூ. 20,000 பொருளுதவி புரிந்த திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார், எம்.ஏ., (ருக்மணி குக்கர் தொழிற்சாலை முதல்வர், சென்னை) அவர்கள் கொடியேற்றிவைப்பார்கள்.

மாநாட்டை உயர்திரு. சு. நடேச பிள்ளை, பி.ஏ., பி.எல்., அவர்கள் (இலங்கை) திறந்துவைப்பார்கள்.

சமாஜ வெளியீடாகத் திரு. ரா. சண்முகசுந்தரம் செட்டியார் அவர்களின் உரையும் விளக்கமும் கொண்ட திருவெம்பாவை - திருப்பள்ளியெழுச்சி நூல் ஒன்றைச் சென்னை - திரு. இராவ்சாகிப் - நல். முருகேச முதலியார், பி.ஏ., அவர்கள் வெளியிடுவார்கள்.

ஆண்டு விழாவிற்கும் சைவர் மாநாட்டிற்கும் சென்னை-சைவப் பெரியார் - திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி.ஏ.,எல்.டி., அவர்கள் தலைமை தாங்குவார்கள்.

திருமதி. தங்கம்மா நடராஜா அவர்கள், சைவ மங்கையர் மாநாட்டைத் திறந்து வைப்பார்கள்; அம் மாநாட்டிற்குப் பழநி - திருமதி. க. ர ஆதிலட்சுமி அம்மையார் அவர்கள் தலைமை ஏற்பார்கள்.

உயர்திரு. கோ. ஆழ்வார் பிள்ளை அவர்கள், (நிரந்தரக் காரியதரிசி - உணவு வர்த்தக மந்திரிப் பகுதி), சைவ இளைஞர் மாநாட்டைத் திறந்து வைப்பார்கள்; அம் மாநாட்டிற்குச் சென்னை - திரு. வித்துவான் - அம்பை சங்கரனர் அவர்கள் தலைமை ஏற்பார்கள்.

அறிஞர் பெருமக்கள் மூன்று நாட்களிலும் சைவ சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்துவார்கள்.

சமாஜ அங்கத்தினர்களும் ஏனைய சைவ சமய அமைப்பினரும், சைவ அன்பர்கள் யாவரும் மூன்று நாட்களும் வந்திருந்து உடனுறையும் பயனைக் கொண்டும் கொடுத்தும் சிறப்பிப்பதுடன், சமாஜத்தை வலுப்படுத்தும் ஆக்க வேலைகளுக்கும் அடிகோலி நலஞ்செய்ய வேண்டுகிறோம்.

இங்ஙனம்:

திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார், எம்.ஏ., சமாஜத் தலைவர்.
திரு. நல். முருகேச முதலியார், பி.ஏ.,
திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி.ஏ., எல்.டி.,
சமாஜத் துணைத் தலைவர்கள்.
திரு. கி. இராமலிங்கர், எம்.ஏ.,
திரு. மா. ப. தியாகராஜன், பி.ஏ., சமாஜச் செயலர்கள்.

வரவேற்புச் சபை

தலைவர்:
சேர். கந்தையா வைத்தியநாதன்,
செந்தில்,
பேதிரிஸ் ரோட், கொழும்பு-3.

காரியதரிசிகள்:
வி. அல்விராசா, சி.சி எஸ்.,
ச. அம்பிகைபாகன், பி.ஏ.
வைத்தீஸ்வர வித்தியாலயம்
யாழ்ப்பாணம்.

---

## நிகழ்ச்சி நிரல்

**முதல்நாள்: மார்கழி 16உ (30-12-60) வெள்ளிக்கிழமை**

முற்பகல் நிகழ்ச்சி: காலை 8 மணிமுதல் 12 மணிவரை

**சைவர் மாநாடு**

கோயில் வழிபாடு:
கொடியேற்றல்:
திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார், எம்.ஏ., அவர்கள்
திறப்புரை: திரு. சு. நடேச பிள்ளை, பி.ஏ., பி.எல்., அவர்கள்

வரவேற்புரை : சேர். கந்தையா வைத்தியநாதன் அவர்கள்
ஆண்டு அறிக்கை படித்தல் : சமாஜச் செயலாளர்.
நூல் வெளியீடு : " திருவெம்பாவை - திருப்பள்ளியெழுச்சி "
திரு. ரா. சண்முகசுந்தரஞ் செட்டியார் உரையுடன் 2-ம் பதிப்பு
—இராவ்சாகிப்-நல். முருகேச முதலியார், பி.ஏ. அவர்கள்
தலைமையுரை : சைவப் பெரியார் - ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி.ஏ., எல்.டி. அவர்கள்

பிற்பகல் நிகழ்ச்சி : மாலை 4 மணிமுதல் இரவு 8 மணிவரை

சொற்பொழிவுகள் :

1. திரு. மு. ஞானப்பிரகாசம், பி.ஏ., பி.எஸ்சி.
—சைவ வாழ்க்கைக்கு வேண்டிய சூழல்
2. திரு. பூ. ஆலாலசுந்தரஞ் செட்டியார், எம்.ஏ., தமிழ்த் துறைத் தலைவர், கிறித்தவக் கல்லூரி, தாம்பரம்.
—சுந்தரரும் செந்தமிழ்ச் சுவையும்
3. திரு. டாக்டர் - மா. இராசமாணிக்கனார், எம்.ஏ., எல்.டி., எம்.ஓ.எல்., பிஎச்.டி., தமிழ் ஆராய்ச்சித்துறை, சென்னைப் பல்கலைக் கழகம்.—சைவ சமய வரலாறு
4. திரு. கலைப்புலவர்-க. நவரத்தினம்
—சமயமும் விஞ்ஞானமும்

**இரண்டாம் நாள் : மார்கழி 17உ (31-12-60) சனிக்கிழமை**

முற்பகல் நிகழ்ச்சி : காலை 8 மணிமுதல் 12 மணிவரை

சைவ மங்கையர் மாநாடு

இறை வணக்கம் :
வரவேற்புரை : திருமதி. மகேஸ்வரி ஸ்ரீகாந்தா
திறப்புரை : திருமதி. தங்கம்மா நடராஜா
தலைமையுரை : திருமதி. க. ர. ஆதிலட்சுமி அம்மையார்

சொற்பொழிவுகள் :

1. பண்டிதை - சத்தியதேவி துரைசிங்கம்
—பெண்களும் சமயமும்
2. சைவப் புலவர் - பண்டிதை செல்வி - தங்கம்மா அப்பாக்குட்டி
—காரைக்காலம்மையார்
3. திருமதி. வித்துவான் - சி. குழந்தையம்மாள், எம்.எல்.ஏ.
—சேக்கிழார் கண்ட சேயிழையார்

பிற்பகல் நிகழ்ச்சி : மாலை 4 மணிமுதல் இரவு 8 மணிவரை

சைவர் மாநாடு

இறை வணக்கம் : தலைவர் முன்னுரை :

சொற்பொழிவுகள் :

1. திரு. வித்துவான் - பொன். முத்துக்குமரன்.
—பெரியபுராணமும் சைவ சித்தாந்தமும்

2. திரு. சி. இராமலிங்கம், எம்.ஏ., தத்துவ விரிவுரையாளர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

—திருவாசகத்தின் உட்கிடை

3. திரு. புலவர்-முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்., சென்னைக் கிறித்தவக் கல்லூரி, தாம்பரம்.

—அகப்பொருளும் அருட்பொருளும்

4. திரு. வித்துவான்–பாலூர்-கண்ணப்ப முதலியார், எம்.ஏ., பி.ஓ.எல்., தமிழ்த்துறைத் தலைவர், புதுக் கல்லூரி, சென்னை.

—கொடிக்கவி

## மூன்றும்நாள்: மார்கழி 18உ (1–1–1961) ஞாயிற்றுக்கிழமை

முற்பகல் நிகழ்ச்சி : காலை 8 மணிமுதல் 12 மணிவரை

### சைவ இளைஞர் மாநாடு

இறை வணக்கம் :

வரவேற்புரை : திரு. ச. பரநிருபசிங்கம்

திறப்புரை : திரு. கோ. ஆழ்வார் பிள்ளை

தலைமையுரை : திரு. வித்துவான் - அம்பை சங்கரனார், தலைமைத் தமிழாசிரியர், பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளி, சென்னை.

சொற்பொழிவுகள் :

1. திரு. ச. அம்பிகைபாகன், பி.ஏ.

—சைவ இளைஞர் இயக்கம்

2. சித்தாந்தக் கலைமணி, வித்துவான் - சி. அருணைவடிவேலு முதலியார், பி.ஏ., எல்.டி.

—சைவநெறி தான்பெற்ற புண்ணியக்கண் இரண்டு

(நண்பகல் உணவுக்குப் பின் சமாஜ உறுப்பினர் பொதுக் கூட்டமும், பணியாளர் தேர்வும்.)

பிற்பகல் நிகழ்ச்சி : மாலை 4 மணிமுதல் இரவு 9 மணிவரை

### சைவர் மாநாடு

இறைவணக்கம் : தலைவர் முன்னுரை :

சொற்பொழிவுகள் :

1. திரு. ஜி. கலியாணம் பிள்ளை, எம்.ஏ., ஆசிரியர், 'திருக்கோயில்'

—தெய்வச் சேக்கிழார்

2. திரு. கி. இலட்சுமணன்.

—சமயமும் இன்றைய சமுதாயமும்

3. சித்தாந்த சிகாமணி - திரு. க. வச்சிரவேல் முதலியார், பி.ஏ., எல்.டி., தலைமையாசிரியர், பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளி, காஞ்சிபுரம்.

—திருவுந்தியார்

4. பேராசிரியர் திரு. சிவராமன், எம்.ஏ., தத்துவத்துறை, காசி பல்கலைக் கழகம்.

—அருள் தத்துவம்

தலைவர் முடிவுரை.

செயலர்களின் நன்றியுரை. வாழ்த்தும் வணக்கமும்.

---

சாது அச்சுக்கூடம், மயிலாப்பூர், சென்னை-4

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையுள் நாடு

மலர் 33 | சார்வரி மார்கழி 1960 டிசம்பர் | இதழ் 12

## திருக்கேதீச்சுரம் சேர்மினே!

இராவ்சாகிப் நல். முருகேச முதலியார்

இவ்வாண்டு சைவ சித்தாந்த மகா சமாஜ ஆண்டு விழாவும் மாநாடும், இலங்கை திருக்கேதீச்சுரத்தில் 30, 31 டிசம்பர் 1960, 1 ஜனவரி 1961 தேதிகளில் நடைபெற இருக்கின்றன. இலங்கைச் சிவநேயச் செல்வர்கள் வேண்டுகோளின் பயனாகத் திருக்கேதீச்சுரத்தைத் தரிசிக்கவும், அவர்களைக் கண்டு மகிழவும் வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது.

இலங்கையில் சரித்திர காலத்துக்கு முற்பட்ட மிகவும் புராதனமான சிவன் கோயில்கள் இருந்திருக்கின்றன. இவற்றுள் மன்னார்ப் பகுதியில் ஸ்ரீ மாதோட்டத்திலிருக்கும் திருக்கேதீச்சுரமும் திருக்கோண மலையிலுள்ள கோணேசர் ஆலயமுமே இதுவரை கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவை தென் கயிலாயமாகப் பாராட்டப்பட்டுள்ளன. இந்த இரு தலங்களும் தேவாரப் பாடல்கள் பாடப்பெற்றவை.

இலங்கையை அரசுபுரிந்த சிவ பத்தனான இராவணனின் மாமனாகிய மயன் கட்டியது திருக்கேதீச்சுர ஆலயம் எனச் சொல்லப்படுகிறது. ஸ்ரீ இராமர், இராவணனை வென்று அயோத்திக்கு மீளும் வழியில் திருக்கேதீச்சுரப் பெருமானை வழிபட்டுச் சென்றார் எனத் தக்ஷிண கயிலாய புராணம் கூறுகின்றது. பஞ்ச பாண்டவர்களில் வில் வீரனான அருச்சுனன் தீர்த்தயாத்திரையின்பொருட்டு இலங்காபுரியை அடைந்தபொழுது திருக்கேதீச்சுரத்தில் எழுந்தருளியுள்ள பெருமானை வழிபட்டான் எனச் சொல்லப்

படுகிறது. இராமர், அகத்தியர், அருச்சுனன் முதலியோர்கள் மாதோட்டம் வழியாகத்தான் இலங்கையை அடைந்திருக்கவேண்டும் என எண்ணப்படுகிறது. பௌத்த இலக்கியங்களிலும் இத் தலத்தைப்பற்றிக் கூறுமிடத்து சுமார் கி. மு. மூன்ரும் நூற்ருண்டிலிருந்து இத்தலம் பிரபலமாக விளங்கிற்று எனக் காணப்படுகிறது. பாண்டிய மன்னர்கள் கி. பி. ஆரும் நூற்ருண்டில் திருக்கேதீச்சுர ஆலயத் திருப்பணிகள் செய்திருக்கின்ருர்கள். ஏழாம், ஒன்பதாம் நூற்ருண்டுகளில் அவதரித்த நமது சமயாசாரியர்களான திருஞானசம்பந்த சுவாமிகளும், சுந்தரமூர்த்தி சுவாமிகளும் திருக்கேதீச்சுரத்துப்பெருமான்மீது பதிகங்கள்பாடியுள்ளார்கள். சம்பந்தர் பாடல் " விருதுகுன்றமா " எனத் தொடங்கும் நட்டராகப் பதிகமும், சுந்தரர் பாடல் " நத்தார் படைஞானன் " எனத் தொடங்கும் அதே பண்ணிலுள்ள பதிகமுமாகும். திருநாவுக்கரசர் "பூதியணி" எனத் தொடங்கும் திருத்தாண்டகத்தில் வைப்புத் தலமாகப் பாடியுள்ளார். மாணிக்கவாசகரும் 'குயிற்பத்திலும்' 'திருவார்த்தையிலும்' இலங்கையில் வண்டோதரிக்கு இறைவன் அருள்செய்த தலம் என்று குறிப்பிட்டுள்ள தலம் திருக்கேதீச்சுரம் எனக் கருதப்படுகின்றது. கேது வழிபட்டதால் 'கேதீச்சுரம்' எனப் பெயர்பெற்றது இத்தலம். இறைவர் பெயர் : கேதீச்சுரர். இறைவியின் பெயர் : கௌரியம்மை. தீர்த்தம்: பாலாவி ஆறு. மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்ருலும் சிறப்புள்ள இத்தலத்தை வழிபடுவோர் வினைகளும் நோய்களும் தீரப்பெற்று இன்புறுவர் எனக் கூறுவர்.

இத்தகைய திருக்கேதீச்சுரம் பதினரும் நூற்ருண்டு முதல் பதினெட்டாம் நூற்ருண்டு இறுதிவரை காலக் கழிவாலும் கவனக் குறைவாலும் பல பழுதுகளை அடைந்தது. அவைகளையன்றி அந்கியர்களான போர்த்துகீசியரும் டச்சுக்காரர்களும் மேலும் அதனைச் சீரழித்தார்கள். அதனல் கோயில் இருந்த இடமும் தெரியாமல் தரைமட்டமாகிவிட்டது எனத் தெரிகிறது.

சைவம் தழைக்க ஈழநாட்டில் அவதரித்த ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர், முதன்முதலாக 1872-ம் ஆண்டில் நிலத்தை அரசாங்கத்தினரிடம்பெற்று ஓர் ஆலயம் அமைக்க முயன்

ஞர்கள். புனருத்தாரண வேலை அந்நாளில் தொடங்கி இப்போதுதான் பூர்த்தியாகிவருகிறது. 1948-ம் ஆண்டில் திருக்கேதீச்சுர ஆலயத் திருப்பணிச் சபை ஒன்று சர். கந்தையா வைத்தியநாதன் அவர்கள் தலைமையில் அமைக்கப்பெற்று நல்ல முறையில் பணியாற்றிவருகிறது. இந்தப் பெரியாரே இவ்வாண்டு நடைபெற இருக்கும் சமாஜ மாநாட்டு வரவேற்புக் குழுத் தலைவராகப் பொறுப்பு ஏற்றுள்ளார்கள். வரவேற்புக்குழு மாநாட்டுக்குத் தக்க ஏற்பாடுகள் செய்து வருவதாக அறியப்படுகிறது.

தமிழ் நாட்டிலும் இன்னும் இந்தியாவிலுள்ள வேறு இடங்களிலும் மலாய் சிங்கப்பூரிலுமுள்ள சைவர்களும் தமிழர்களும் பெருவாரியாகத் திருக்கேதீச்சுர மாநாட்டுக்கு விஜயம்செய்து திருக்கேதீச்சுரத்தானை வழிபட்டுப் பயனடைவது மட்டுமன்றி, மாநாட்டை வெற்றிகரமாக நடத்தித் தந்து இலங்கைச் சைவர்களுக்கு மகிழ்ச்சியைத் தரச்செய்வது கடமையாகும். எனவே 'திருக்கேதீச்சுரம் சேர்மின்' என வேண்டப்படுகிறது. இலங்கைபோவதற்கு 'பாஸ்போர்ட்', 'விசா' பெறுவது முதலிய விஷயங்களைப்பற்றி முன்பே "சித்தாந்தத்"தில் வெளிவந்துள்ளது. பாஸ்போர்ட் மனுவில் இலங்கை முகவரி "C/o திரு. C. அல்லிராஜா, C.C.S., செயலாளர், சைவசித்தாந்த மகா சமாஜ மாநாட்டு வரவேற்புக் குழு, திருக்கேதீச்சுரம், இலங்கை" எனக் குறிப்பிடவேண்டும். வேறு விவரங்களுக்குச் சமாஜச் செயலாளருக்காவது, திருக்கேதீச்சுரம் வரவேற்புக்குழுச் செயலாளருக்காவது விரைவில் எழுதிப்பெற்றுக்கொள்ளவும். முக்கியமாகச் சமாஜ மாவட்டப் பிரதிநிதிகள் டிசம்பர் 20-ம் தேதிக்குள் அவரவர்கள் மாவட்டங்களிலிருந்து எத்தனை உறுப்பினர்களும், மற்றவர்களும் மாநாட்டுக்குவர விரும்புகிறார்கள் என ஒரு பட்டியல் தயார்செய்து சமாஜச் செயலாளருக்கு எழுதித் தெரிவிக்கவேண்டும். பிரதிநிதிகள் இந்த விஷயத்தில் தவறாமல் பொறுப்பு ஏற்றுத் துரிதமாகப் பணியாற்ற வேண்டப்படுகிறது. இது சமாஜத்துக்கும், இலங்கை நண்பர்களுக்கும் செய்யவேண்டிய கடமையாகும்.

திருக்கேதீச்சுரத்தின் இயற்கை அழகைப்பற்றியும் அங்கு எழுந்தருளியுள்ள இறைவன் அருட்டிறத்தைப்பற்றி

யும் சம்பந்த சுவாமிகள் மிக அழகாகத் திருவாய்மலர்ந் துள்ளார்கள்.

" கேடிலாத கேதீச்சுரந் தொழுதெழக் கெடுமிடர் வினைதானே"
" ......................மாதோட்டத்
தண்ணல் நண்ணுகே தீச்சுர மடைபவர்க் கருவினை யடையாவே"
" ......................மறிகடல் மாதோட்டத்
தடிகளாதரித் திருந்தகே தீச்சுரம் பரிந்த சிந்தையராகி
முடிகள் சாய்த்தடி பேணவல் லார்தம்மேல் மொய்த்தெழும்வினை [போமே"

எனப் பலவகையாகப் பாடியுள்ளார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருக்கேதீச்சுரத்தான்
" அங்கத்துறு நோய்கள் அடியார்மேல் ஒழித்தருளு"வான்
" வெய்ய வினையாயவ் வடியார்மேல் ஒழித்தருளு"வான்
" ஊனத்துறு நோய்கள் அடியார்மேல் ஒழித்தருளு"வான்

எனக் " குறையாத் தமிழ் " சாற்றியுள்ளார்.

எனவே " திருக்கேதீச்சுரம் புடைசூழச் சேரப் பரிந்த சிந்தை கொள்மின் " என வேண்டுகின்றோம்.

---

# பரஞ்சோதி முனிவர் பாடற்றிறன்

(முருகவேள்)

முன்னுரை: சிவபெருமானின் மூன்று கண்களைப் போன்று, சிவநெறிப் புராணங்களுள் பெரியபுராணம் திருவிளையாடற் புராணம் கந்தபுராணம் என்னும் மூன்றும் சிறப்புடையன என்பர். இவற்றுள், திருவிளையாடற் புராணத்தினை இயற்றி அளித்த ஆசிரியரே பரஞ்சோதி முனிவராவர். செல்லிநகர்ப் பெரும்பற்றப்புலியூர் நம்பி, இலம்பூர் வீமநாத பண்டிதர், வாயற்பதி அனதாரியப்பர் என்னும் வேறு பிறர் பலருங்கூட, ஆலவாய்ச் சொக்கரின் அறுபத்துநான்கு திருவிளையாடல்களையும் விதந்து புகழ்ந்து நூல்கள் இயற்றி யுள்ளனராயினும், இன்று 'திருவிளையாடற் புராணம்' எனக் கேட்ட தனையானே எவரும் நினைவுகூரச் சிறந்து நிற்பது, பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடற் புராணமே யாகும். இதனால், அதனை இயற்றியருளிய பரஞ்சோதி முனிவரின் பாடற்றிறன் எத்தகையதாக இருத்தல் வேண்டும் என்ப

தனை எவரும் இனிதுணரலாம். பிற திருவிளையாடல் நூல்கள் எதுவும் பெருத சிறப்பினை இந்நூல் பெற்றிருப்பதற்கு, வேறு பிறிதெதனையும் விடப் பரஞ்சோதி முனிவரின் சிறந்துயர்ந்த பாடற்றிறனே காரணம் ஆகும்.

பாடற்றிறன்: பரஞ்சோதியாரின் பாடற்றிறன் தனிப் பெருஞ் சிறப்பும் சுவையும் வாய்ந்து, பயில்வார் உள்ளமெல்லாம் கொள்ளைகொள்ளும் பான்மையிற் சிறந்து திகழ்கின்றது. பயில்வார் மனங்கவரும் பான்மைத்தாய்த் திகழ்தலே, சிறந்த பாடற்றிறனுக்குச் செவ்விய இலக்கணமாகும். இவ்வுண்மையினைப் பின்வரும் 'தண்டியலங்காரச் செய்யுள்' இரட்டுற மொழிதலாற் சுவைமிக ஓராற்ருல் விளக்குதல் உணர்ந்தின்புறற்பாலது.

"செந்திருவும் திங்களும் பூவும் தலைசிறப்பச்
சந்தத் தொடையோ டணிதழுவிச்—செந்தமிழ்
கற்றர் இயற்றும் கவிபோல் மனம்கவரும்
முற்று நலத்தாள் முகம்."

பரஞ்சோதி முனிவரின் பாடல்களிற் சொல்வளமும் கற்பனைநலமும் ஓசைநயமும் செறிந்தோன்றித் திகழ்கின்றன. தமக்கு முன்னர் விளங்கிய பண்டைப் பெருஞ் சான்றோர்களின் நூல்களையெல்லாம் முறையாகத் துறைபோகக் கற்றுணர்ந்து, அவ்வுணர்வில் தோய்ந்து ஒன்றிய அருங்கலை யுள்ளத்தினராக நின்று, தாம் கற்றுத் தேர்ந்து சுவைத்து மகிழ்ந்த கலைநூல்களின் சாயல்கள் பலவும் ஆங்காங்கே நிழலாடித் திகழும் வண்ணம், பரஞ்சோதி முனிவர் தமது நூலைப் பாடியுள்ளார்! அதனல், அவர்தம் பாடல்கள் சொற்பொருட் செறிவும் சுவையும் மிகுந்து, பயில்வார்க்கு நாவூறலை விளைக்கும் நலங்கெழுமிச் சுடர்விட்டொளிர்கின்றன! பேராசிரியர் மனேன்மணீயம் சுந்தரம் பிள்ளை அவர்கள், பரஞ்சோதிமுனிவரின் பாடல் நலங்களிற் பெரிதும் ஈடுபாடு கொண்டு, அதன்கண் ஒருசில பாடல்களையேனும் நாடோறும் ஓதி மகிழும் பழக்கத்தினைப் பல ஆண்டுகளாகத் தாம் கடைப்பிடித்து வருவதாகக் குறிப்பிட்டுள்ளார்.* இங்ஙனம் பேரறிஞர்கள் பற்பலரின்

*"It is not possible in this connection to open an explicit discussion on the historical value of the Tiru

உள்ளங் கவர்ந்த பாடற்றிறனுடையவர் பரஞ்சோதி முனிவர். சிறந்த கவிதைகளை இயற்றும் திறம்பெற விழைவோர், பரஞ்சோதியாரின் திருவிளையாடற்புராணப் பாடல்களைப் பலகாற் பயின்றோதி வந்தால், அத்திறத்தினை எளிதிற் கைவரப் பெறலாம் எனப் பெரியவர்கள் பலர் கூறுவதுண்டு. அத்தகைய பெருஞ் சிறப்பினராகிய பரஞ்சோதி முனிவரின் பாடல்களில் ஒரு சிலவற்றை ஈண்டுக் கண்டு சுவைத்தின்புறுவோம் :

இயற்கைப் புனைவு : ஒரு நல்லிசைக் கவிஞரின் கவிதைச் சிறப்பினை அளந்தறிந்து சுவைத்து மகிழ்தற்குப் பல வழிகள் உண்டு. அவற்றுள், அவர் இயற்கைப் பொருள் நிகழ்ச்சிகளையும் காட்சிகளையும் எங்ஙனம் திறம்படப் புனைந்துரைத்து விளக்கியுள்ளார் எனக் கண்டறிவதும் ஒரு வழியாகும். இயற்கையில் ஈடுபாடும், அதனைப் புனைந்துரைக்கும் ஆர்வமும் கவிஞர்கள்பாற் பொதுவாகக் காணப்படும் சிறப்பியல்பாகும். 'கவிஞனின் கண்ணானது, மிகச் சிறந்தோர் உள்ளெழுச்சியினால் விண்ணிலிருந்து மண்ணையும், மண்ணிலிருந்து விண்ணையும் சுற்றிச் சுழன்று பார்வையிடுகின்றது; காணவும் அறியவும் படாத பொருள்களின் இயல்புகளைக் கற்பனையுணர்வானது உருவாக்கித் தந்துகொண்டிருக்க, அவைகளைக் கவிஞனின் எழுதுகோல் எழில்கனிந்த கலையோவியங்களாக இனிது வடித்துக் கொடுக்கின்றது ; காற்றெனை நுண்ணியவாய்க் காணப்படாமையில் இல்லனவாய் விளங்கும் அவற்றிற்கு ஓர் உறைவிடமும் பெயரும் அளிக்கின்றது'* எனச் செகப்

Vilaiyadal Purana......I mean no disparagement to the Purana as a literary work. So charming is its diction and so great its powers of clear description that for years together I have been in the habit of reading a few stanzas of it every day." —*Prof. P. Sundaram Pillai, M.A.*

* "The poet's eye, in a fine frenzy rolling,
Doth glance from heaven to earth, from earth to [heaven
And as imagination bodies forth
The form of things unknown, the poet's pen
Turns them to shapes, and gives to airy nothing
A local habitation and a name" —*Shakespeare*

பிரியர், கவிஞர்களின் இயல்பினை இனிதெடுத்து விளக்கு கின்றார். அதனால், கவிஞர்களின் கவித்திறனுக்கும் இயற்கைப் புனைவுக்கும் மிக்க பெருந் தொடர்புண்மை இனிது பெறப்படும்.

பொதியமும் பொருநையும்: பரஞ்சோதி முனிவர் இயற்கைநலனைப் புனைந்து பாடுதலிற் சிறந்து திகழ்கின்றார். பண்டைச் சங்ககாலப் புலவர்கள் எங்ஙனம் இயற்கைப் பொருள்களில் மிக்க ஈடுபாடு உடையராய் விளங்கி, அவற்றைத் தமது பாடல்களில் இனிதெடுத்துப் பாடினரோ, அங்ஙனமே பரஞ்சோதி முனிவரும் பாடுகின்றார். பிற் காலப் புலவர் என்னும் காரணம் பற்றிப் பரஞ்சோதி முனிவரின் பாடற்றிறனை நாம் எளிதாக எண்ணிவிடுதற் கில்லை. 'ஒரு பொருளை அவர் புனைந்து பாடும்பொழுது, நாம் அதனை நேரே காண்பதைக் காட்டிலும் மிக விளக்க மாகக் காண்கின்றோம்; அது மட்டுமன்று, உற்றும் தொட்டுங்கூட உணரப் பெறுகின்றோம்' ("When he describes any thing, you more than see it; you feel it too"—Dryden on Shakespeare). 'பொதிய மலையிலிருந்து பொருநையாறு தோன்றுகின்றது' என்னும் செய்தியினைப் பரஞ்சோதியார் எத்துணைச் சுவையமையப் பாடுகின்றார், பார்மின்கள்!

" கருநிற மேகம் என்னும் கச்சுஅணி சிகரக் கொங்கை,
அருவியாம் தீம்பால் சோா, அகன்சுனை என்னும் கொப்பூழ்ப்
பொருவில்வேய் என்னும் மென்தோட் பொதியமாம் சைலப் பாவை
பெருகுதண் பொருநை என்னும் பெண்மகப் பெற்றாள் அன்றே "

பொதியமலை ஒரு பெண். அதன் சிகரங்கள் கொங்கைகள். மலைச் சிகரங்களில் மேகம் படிதல், அப் பெண் கச்சு அணிந்திருத்தல்போலக் காணப்படுகின்றது. மலையினின்று அருவிகள் பெருகுதல், தீம்பால் பெருகுதலை ஒத்துத் திகழ் கின்றது. சுனைகள் கொப்பூழை நினைவூட்டுகின்றன. மூங் கில்கள் தோள்களைப் போன்றுள்ளன. இத்தகைய மலையி னின்று ஆறு தோன்றுதல், ஒரு தாய் ஒரு பெண் குழந்தை யைப் பெற்றெடுப்பது போன்றுளது, எனச் சுவைகெழும விரித்துரைத்துப் பாடுகின்றார் பரஞ்சோதியார்!

கடலிற் கலத்தல்: இங்ஙனமே, பொருநையாறு கடலிற் சென்று கலக்கின்றது என்னும் சுருங்கிய கருத்தினை, மிகவும் சுவை பொருந்தும்படி அவர் பாடியருள்கின்றார்:

“ பன்மலர் மாலை வேய்ந்து, பால்நுரைப் போர்வை போர்த்துத்,
தென்மலைத் தேய்ந்த சாந்தம் மான்மதச் சேறு பூசிப்,
பொன்மணி ஆரம் தாங்கிப் பொருநையாம் கன்னி, முந்நீர்த்
தன்மகிழ் கிழவன் ஆகம் தழீஇக்கொடு கலந்த தன்றே ”

கணவனை மணந்து சேரும் கன்னிப் பெண்கள் அழகுக்காக மலர்மாலைகள் சூடுவர். நாணத்தால் முகம் மறையத் தலையிற் போர்வை போர்ப்பர். சந்தனம் களபம் முதலிய நறுமணப் பொருள்களை உடலிற் பூசுவர். பொன்னும் மணியும் முதலியவற்றால் இயன்ற பலவகை விலையுயர்ந்த அணிவகைகளைப் பூண்டு கொள்வர். இம் முறையே, பொருநை ஆறாகிய கன்னிப் பெண்ணும் மாலை வேய்ந்து, நுரைப் போர்வை போர்த்துச் சந்தனம் முதலியன பூசிப் பொன்மணி ஆரம் தாங்கிச் சென்று, கடலாகிய தன் கணவனின் மார்பினைத் தழுவிக் கலந்து இன்புற்றது எனப் பரஞ்சோதியார் கூறும் திறம் எத்துணை அழகியதாக உள்ளது!

மரங்கள் மலர்தல்: இளவேனிற் காலத்தின் இயல்புகளைப் பரஞ்சோதியார் பாடுதற்குரிய ஓர்இடம் நேர்கின்றது. அங்கே தமது புலமைநலம் முற்றும்பொலிந்து திகழும்படி, பரஞ்சோதியார் பல பாடல்களால் இளவேனிற்கால நிகழ்ச்சிகளை இனிது பாடுகின்றார்! இளவேனிற் காலத்தில் மாமரம் தளிர்க்கும்; பலாசம் காஞ்சி மரவம் காயா ஞாழல் புன்னை முதலிய மரங்கள் மலரும்.

“அண்டர்வான் தருமேற் சீறிச் சிவந்தெழூஉ தாங்குத், தேமாத்
தண்டளிர் ஈன்று வானந் தைவர, நிவந்த; காசு
கொண்டிடை அழுத்திச் செய்த குழையணி மகளிர் போல,
வண்டிறை கொள்ளப் பூத்து மலர்ந்தன சேருந்தி யெல்லாம்”

“செங்கதிர் மேனி யான்போல் அவிழ்ந்தன செழும்ப லாசம்;
மங்குலூர் செல்வன்போல மலர்ந்தன காஞ்சி; திங்கட்
புங்கவன் போலப் பூத்த பூஞ்சினை மரவம்; செங்கை
அங்கதிர் ஆழி யான்போல் அலர்ந்தன விரிந்த காயா.”

"தரைகிழித் தெழுநீர் வைகைத் தடங்கரை எக்கர் அல்குல்
அரவமே கலேசூழ்ந் தென்ன, அலர்ந்துதா துகுப்ப ஞாழல்;
மாகதம் தழைத்து, வெண்முத்து அரும்பிப்,பொன் மலர்ந்து,வாங்கும்
திரைகடற் பவளக் காடு செய்வன, கன்னிப் புன்னை."

உலகியல் உவமைகள்: இளவேனிற் காலம் தோன்று தற்கு முன்னே மரங்கள் இலையை யுதிர்க்கும். இலையுதிர்ந்த பின்னரே மரங்கள் புதிதாகத் தளிர்விடும்; பசுமை நிறம் அடைந்து தழைக்கும்; தேன்மிக்க மலர்களைப் பூக்கும். இவ்வியற்கை நிகழ்ச்சிகளைப் பரஞ்சோதியார் உலகியல் வாழ்க்கை நிகழ்ச்சிகளை உவமை காட்டிச் சுவைதுளும்பப் பாடுகின்றார்:

கணவன்பால் ஊடல்கொண்ட பெண்கள் தம் அணி கலன்களை யெல்லாம் சினந்து கழற்றி எறிவர்; அதுபோல மரங்கள் இலையுதிர்க்கின்றன. இலையுதிர்ந்த மரங்கள் பின் னர்க் குழைவரத் தழைக்கும்; அச்செயல், மகளிர் தமது கணவனை ஊடல் நீங்கிய பின்னர்க் குழைந்து புல்லி உவகை யால் உடல் பூரிப்பது போன்றுள்ளது. கணவனைப் பிரிந்த பெண்கள் கண்ணீர் பெருக உடலிற் பசலையுற்று நிற்பர்; அதுபோல் மரங்கள் கள்நீர் பெருகப் பசுமை நிறம் எய்தித் திகழ்கின்றன. களவொழுக்கத்திற் காதல் கைம்மிக்குத் திளைக்கும் மகளிர் ஊரவரால் அலர் தூற்றப்படுவர்; அது போல மரங்கள் யாவும் இளவேனிலில் அலர்பூத்து நெருங்கி அடர்ந்துள்ளன.

"ஊடினர் போல வெப்பி இலையுதிர்ந்து; உயிர்அன் னாரைக்
கூடினர் போல எங்கும் குழைவரத் தழைத்து; நீங்கி
வாடினர் போலக் கண்ணீர் வாரமெய் பசந்து; மையல்
நீடினர் அலர்போற் பூத்து, நெருங்கின மரங்கள் எல்லாம்."

கற்புடை மகளிரும் கொடிகளும்: கோடைகால வெப் பத்தால் மரங்கள் இலையுதிர்ந்து வாடுகின்றன. பின்னர்த் தழைக்கின்றன. அச்சமயங்களில் மரங்களைச் சுற்றிப் படர்ந்துள்ள கொடிகளும் முறையே வாடியும் தழைத்தும் நிற்கின்றன. இக்காட்சி, கணவன் துன்புறுங்கால், தாமும் துன்புற்று, கணவன் மகிழுங்கால் தாமும் மகிழ்ந்து நிற் கின்ற கற்புடைய மகளிரின் செயலைப் போன்றுள்ளது.

"விழைதரு காத லார்தாம் மெலிவுற மெலிந்து, நெஞ்சம்
குழைவுறக் குழைந்து நிற்கும் கோதிலாக் கற்பி னர்போல்,
மழையறும் கோடை தீப்ப மாந்தலை வாட, வாடித்
தழைவுறத் தழைத்து நின்ற, தழீஇயபைங் கொடிகள் எல்லாம்"

கொடிகளும் நடனமும்: இளவேனிலில் தென்றல் வீசுகின்றது. மலர்களில் தேன்நிறைந்து சிதறுகின்றது. தும்பிகள் தேனையுண்டு இசை முரல்கின்றன. தென்றற் காற்று வீசுதலால் பூங்கொம்புகள் அசைந்து ஆடுகின்றன. இக்காட்சியானது, நடன ஆசிரியர் ஆட்டுவிக்க, முகத்தினின்று வியர்வைத் துளிகள் சிந்துமாறு, இசைபாடிக் கொண்டு, அழகிய பெண்கள் அசைந்தாடும் நடனக் காட்சியை நினைவூட்டுகின்றது.

"சேட்டிகைத் தென்கால் தள்ளத், தேண்மதுச் சிதறத், தும்பி
நீட்டிசை முரலச், சாயா நின்றுபூங் கொம்பர் ஆடல் -
நாட்டியப் புலவன் ஆட்ட, நகைமுகம் வெயர்வை சிந்தப்,
பாட்டிசைத் தாடா நின்ற பாவைமார் போன்ற அன்றே."

மலர்களும் வள்ளன்மையும்: செவ்வந்தி மலர்களும் மகிழம் பூக்களும் கீழே உதிர்ந்து கிடக்கின்றன; ஆயினும், அவற்றில் இருக்கும் சிறிதளவு தேனை விரும்பிவந்து, வண்டுகள் உண்டு களிக்கின்றன. அக்காட்சி, நல்லவர் செல்வம் குறைந்து வறுமை அடைந்தாலும், தமது வள்ளன்மையிற் குறையமாட்டார்கள் என்னும் உண்மையைப் புலப்படுத்துகின்றது.

"மலர்ந்தசெவ் வந்திப் போதும் வகுளமும் உதிர்ந்து, வாடி
உலர்ந்துமொய்த் தளிதேன் நக்கக் கிடப்பன ; உள்ளம் மிக்க
குலந்தரு நல்லோர் செல்வம் குன்றினும், தம்பால் இல்லென்று
அலர்ந்தவர்க் குயிரை மாறி யாயினும், கொடுப்பர் அன்றோ ?"

தென்றலும் மாணவனும்: சோலைகளில் தென்றல் வீசுகின்றது. அஃது அங்குள்ள பொய்கைகளில் மலர்ந்து திகழும் தாமரையைத் தழாவுகின்றது. இருவாட்சி முல்லை மல்லிகை முதலிய பூப்பந்தர்களிற் சென்று தாவி அம்மலர்களின் மணத்தினை நன்கினிது கூட்டுண்கின்றது. அதனாற்

குளிர்ச்சியுற்று, மெல்லென்று இனிமையாக வீசி இயங்கு கின்றது தென்றல்! தென்றலின் இந்தச் செய்கையானது எங்கெங்கே அறிவுநூற் கலைகள் வளர்கின்றனவோ, அங்கங் கெல்லாம் சென்று அவற்றை ஆராய்ந்து கற்று மகிழும் ஒரு சிறந்த மாணவனின் செயல்போலக் காணப்படுகின்றது.

"பொங்கரின் நுழைந்து, வாவி புகுந்து,பங் கயம்து ழாவிப்,
பைங்கடி மயிலை முல்லை மல்லிகைப் பந்தர் தாவிக்
கொங்கலர் மணம்கூட் டுண்டு, குளிர்ந்துமெல் லென்று தென்றல்,
அங்கங்கே கலைகள் தேரும் அறிவன்போல், இயங்கும் அன்றே."

இளவேனிற் கோமகன்: இத்தகைய இயற்கை நிகழ்ச் சிகள் யாவும் நடைபெறுதற்குக் காரணமாகத் திகழும் இளவேனிற் காலத்தின் சிறப்பை என்னென்பது? அதனை ஓர் அரசனுக்கு ஒப்பிட்டுச் சிறப்பித் துரைத்தலே பொருத்த மாகும். இளவேனிற் காலமாகிய அரசன் முடிசூடி வீற் றிருக்கும் திருவோலக்க மண்டபம், சோலைகளே எனலாம். அரசனின் திருவோலக்க மண்டபத்தில் ஏவலர் சிலர் களாஞ்சி ஏந்தி நிற்பர். முழவம் முதலிய இசைக்கருவிகள் ஒலிக்கும். பெண்கள் மங்கலப் பாடல்கள் பாடி வாழ்த் தெடுப்பர். வீரர்கள் வாளேந்தி நின்று காவல் புரிவர். அங்ஙனமே, இளவேனில் ஆகிய அரசனுக்குச் சோலையாகிய ஓலக்கமண்டபத்தில்,தாமரைகள் களாஞ்சி தாங்குகின்றன. குயில்கள் முழவம் முதலியனபோல ஒலிக்கின்றன. கிளிகள் மங்கலம் இயம்புகின்றன. தும்பிகள் இசைபாடுகின்றன. தாழைமலர்கள் வாளேந்தி நிற்கின்றன.

"தாமரை களாஞ்சி தாங்கத், தண்குயில் முழவம் ஏங்க,
மாமருது அமருங் கிள்ளை மங்கலம் இயம்பத், தும்பி
காமரம் இசைப்ப, முள்வாய்க் கைதைவாள் எடுப்ப, வேனிற்
கோமகன் மகுடம் சூடி, இருப்பதக் குளிர்பூஞ் சோலை"

செஞ்சொற் கவியின்பம்: உலகியற்கைப் பொருள் களிற் காணப்படும் பலதிற அமைதியின்ப அழகினை ஆழ்ந்து ஆராய்ந்துணரும் சான்றோர்களுக்கும், மனித வாழ்க்கை யின் மூலை முடுக்கர்களில் ஒதுங்கி மறைந்து கிடக்கும் நுண்பொருள்களை நுனித்தறிய முயலும் அறிஞர்களுக்கும்,

சமயத்துறையிலும் தத்துவநெறியிலும் உயர்ந்துயர்ந்து சென்று ஈடுபட்டுத் திளைக்கும் மெய்யுணர்வாளர்களுக்கும், ஒழுக்கத் தூய்மையிலும் இறையருளுணர்விலும் சிறந்து அவற்றின் அமைதியின்ப நலத்தினையே விழைந்து நிற்கும் அருளாளர்கட்கும், நிலைத்த அழகுடையதாய் நெஞ்சம் கவரும் சிறப்பும் பயனும் வாய்ந்து, மிகவும் பேரின்பத்தினை விளைவிக்கும் செயல், நலம் நிறைந்த சிறந்த கவிதைகளைப் படித்து மகிழ்தலைவிட வேறு பிறிதொன்றில்லை. 'கவிதை இன்பமானது அரசாட்சி இன்பத்தினை விட மிகப் பெரிதும் உயர்வுடையதாகும் என்று சிவபெருமான் சான்றாக யான் துணிந்து கூறுவேன்' என்னும் பொருள் அமைய,

அர,சாட்சி யாக அறைவேன்; கவியின்(பு)
அரசாட்சி இன்பின்உயர் வாம்''

என முதுபெரும் புலவர் வேள்ளகால் சுப்பிரமணிய முதலியார் அவர்கள் கட்டுரைத்துச் சொல்கின்றார். அம் முறையில் ஆராய்ந்தால், பரஞ்சோதியாரின் பாடற்றிறன் நம்மனோர்க்குப் பேரின்பம் பயக்கவல்லதென்பதில் ஐயமில்லை. அவரனைய சிறந்த பெருங்கவிஞர்களின் பாடல்களை யெல்லாம் பயின்று ஓதி, நாம் அனைவரும் நலம் பெற்றுய்ய முயலுவோமாக!

அரியநல் இயற்கை அழகினை ஆராய்ந்
தகங்களித் தின்புறு வோர்க்கும்,
மருவும்இவ் வாழ்க்கை மறைபொருள் பலவும்
மதித்துணர் அறிஞர்கள் தமக்கும்,
விரிவுறு சமய மெய்யுணர் வொளியில்
விரும்பிமேன் மேற்படர் பவர்க்கும்,
திருவருள் ஒழுக்கம் செறிந்தது யவர்க்கும்
சிறந்தநற் கவிதையே இன்பாம்—முருகவேள்

——

# சைவத் தேர்வு வினாக்கள்-1960

## சைவப் புலவர் - இலக்கியம்

மூன்று மணிநேரம்] [மதிப்பெண் நூறு

1. திருக்கோவையாரின்கண் மாணிக்கவாசகர் "அறிவன் நூற்பொருளும் உலகநூல் வழக்கும் என இருபொருளும் நுதலி எடுத்துக் கொண்டனர்" என்பதற்குச் சான்று தருக.

2. "தீவாய் உழுவை கிழித்தது அந்தோ" என்னும் தொடர் குறிக்கும் பொருள்கள் யாவை? அச் செய்யுள் என்ன துறையைச் சேர்ந்தது? விளக்குக.

3. பாங்கன் வினுதல், அறியாள் போறல், கண் நயந்துரைத்தல் என்னும் துறைகளில் ஏதேனும் ஒன்றற்குரிய திருக்கோவையார் செய்யுளை எழுதிப் பொருள் தருக.

4. திருஞான சம்பந்தரின் புராணத் தொடக்கத்தில் சீர்காழியின் சிறப்பினைச் சேக்கிழார் எவ்வெவ்வாறு வருணித்துள்ளார்?

5. திருஞான சம்பந்தர் தமது தேவாரத் திருப்பதிகங்களில் 8, 9, 10-ஆம் பாடல்களில் முறையே பெரும்பாலும் குறிப்பிடுவன யாவை? அவை குறித்துத் தெய்வப் புலவர் சேக்கிழார் பெருமான் தரும் விளக்கம் யாது?

6. திருஞான சம்பந்தரோடு சம காலத்தவர்களாக வாழ்ந்த நாயன்மார்கள் யார் யார்? அவர்களைப் பற்றிச் சிறு குறிப்புக்கள் வரைக.

7. 'அகத்தியர் தேவாரத் திரட்டு' பற்றிய வரலாற்றையும், அஃது எவ்வெப் பொருள்கள் பற்றித் திரட்டப் பெற்றது என்பதையும் குறிப்பிடுக. (அல்லது) திருவாசகம் பண்டிதமணி கதிரேசனர் உரையில் நீங்கள் சுவைத்த ஒரு பாடற்பொருள் நயத்தினை எழுதுக.

8. 'சிவலிங்க உண்மை' பற்றி இயன்றவரை மேற்கோள்களுடன் சுருங்க விளக்குக.

9. 'திருவுருவ வழிபாடு' மிகவும் இன்றியமையாதது என்பதனைத் தெளிவுறுத்துக.

10. திருக்குறள் சமணம் பௌத்தம் வைணவம் என்னும் சமயங்களுக்கு உரிய நூல் என்று கூறுவோர் குறிப்பிடும் சான்றுகள் யாவை? அவற்றைத் 'திருக்குறளின் உட்கிடை சைவ சித்தாந்தமே' என்னும் நூலாசிரியர் எங்ஙனம் மறுத்துள்ளார்? சுருக்கமாகக் குறிப்பிடுக.

---

## சைவப் புலவர் - சாத்திரம்

மூன்றுமணி நேரம்] [மதிப்பெண் நூறு

1. சிவஞான போதச் சிறப்புப் பாயிரத்தின்கண் ஆக்கியோன் பெயர் முதலியன குறிப்பிடப்பட்டுள்ளமையினை விளக்குக.

2. சிவஞானபோத மூன்றாம் சூத்திரத்தினை எழுதி, அதன் அதிகரணப் பாகுபாடுகளையும், அவற்றால் மறுக்கப்படும் கொள்கையாளர்களின் பெயர்களையும் குறிப்பிடுக.

3. ஒன்பதாம் சூத்திரத்தினை வரைந்து, அதன் பதப் பொருளைத் தந்து விளக்குக.

4. 'ஒருங்கிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா' என்னும் தொடர்ப் பொருளை ஆசிரியர் மெய்கண்டார் தாம் இயற்றிய 'வார்த்திகம்' என்னும் பொழிப்புரையில் எவ்வாறு விரித்துரைத்துள்ளார்?

5. சிவஞானபோத வெண்பாக்கள் எவையேனும் இரண்டினை எழுதி, அவற்றின் கருத்தைப் புலப்படுத்துக.

6. "அறுவகைச் சமயத்தோர்க்கும்" (அல்லது) "மறையினால் அயனால் மாலால்" என்னும் சித்தியார் பாடல்கள் இரண்டனுள், ஏதேனும் ஒன்றிற்குச் சிவஞான முனிவர் விரித்துரைத்த நுண்பொருள்களைக் குறிப்பிடுக.

7. சிவஞான சித்தியார் தத்துவ நூலாயினும் கவிதைச் சுவையும் அமையும்படி அருள்நந்திசிவம் அதனை இயற்றியுள்ளார் என்பதற்கு ஏதேனும் சான்று தருக.

8. மெய்கண்டாரின் சிவஞானபோதத்தினை அடியொற்றித் தழுவி, அதற்கு ஒரு விரிவுரை போல விளங்குவதே சிவஞான சித்தியார் என்பதனைச் சான்று காட்டித் தெளிவுறுத்துக.

9. சிவப்பிரகாசத்தில் சைவ சித்தாந்தத்தின் சிறப்பை ஆசிரியர் உமாபதிசிவம் எத்தகையதென விளக்கி யுள்ளார்? செய்யுளையாதல் அதன் பொருளையாதல் எழுதுக.

10. முத்திபேதங்களின் இயல்பைக் கூறும் சிவப்பிர காசச் செய்யுளில் மறுக்கப்படும் மதங்கள் எவை எவை? (அல்லது) சிவப்பிரகாசம் உண்மை யதிகாரத்தில் என் னென்ன பொருள்களை விளக்கப்புகுவதாக ஆசிரியர் அதன் தொடக்கத்தே குறிப்பிடுகின்றார்?



## இளஞ் சைவப் புலவர் - இலக்கியம்

மூன்றுமணி நேரம்] [மதிப்பெண் நூறு

1. திருமுனைப்பாடி நாட்டின் சிறப்பைச் சேக்கிழார் எங்ஙனம் புனைந்துரைத் துள்ளார்?

2. திருநாவுக்கரசர் வரலாற்று நிகழ்ச்சிகள் ஒரு சில வற்றிற்கு அவர்தம் பாடல்களில் அகச்சான்றுகள் தருக.

3. திருநாவுக்கரசரும் திருஞான சம்பந்தரும் சீர் காழியிற் சந்தித்து மகிழ்ந்ததனைச் சேக்கிழார் எவ்வாறு வருணித்துள்ளார்? (அல்லது) திருநாவுக்கரசரைப் பற்றிய தியான சுலோகங்கள் போல வரும் பாடல்களில் ஏதேனும் ஒன்றை எழுதுக.

4. திருச்சத்திமுற்றம், திருவீழிமிழலை, பழையாறை வடதளி, திருவையாறு, திருப்புகலூர் என்னும் தலங்கள் திருநாவுக்கரசரின் வரலாற்றில் எவ்வெவ்வகையில் தொடர் புடையன?

5. பின்வரும் குறள்களுக்குப் பொருள் எழுதுக:

1. கோளில் பொறியில்.........
2. துப்பார்க்குத் துப்பாய.........
3. நத்தம்போற் கேடும்.........

6. பின்வரும் குறள்களுள் இரண்டற்குப் பரிமே-லழகர் உரையை இயன்ற அளவு விளக்குக:

1. சுவையொளி யூறோசை.........
2. நாளென ஒன்றுபோல்.........
3. இலன்என்னும் எவ்வம்.........

7. ஏகதேச உருவகம், நிரல்நிறை, சொற்பொருட் பின்வருநிலை, இல்பொருள் உவமை என்னும் அணிகளுக்குத் திருக்குறளில் ஒவ்வோர் உதாரணம் தந்து விளக்குக.

8. பரிமேலழகரின் உரைத்திறனைக் காட்டும் பதசாரங்களுள் சிறந்தவை இரண்டினை எழுதுக.

9. முருகன் வழிபாடு மிகமிகத் தொன்மையானது என்பதனைத் திரு. வி. கலியாணசுந்தரனார் எங்ஙனம் விளக்குகின்றார் ?

10. கண்ணப்பர் வரலாற்றிற் பண்டிதமணி கதிரேசஞ் செட்டியார் அவர்கள் விளக்கியுள்ள நுண்பொருள்கள் யாவை ? (அல்லது) "வழங்குகின்றாய்க்குன் அருளார் அமுதத்தை வாரிக்கொண்டு" எனவரும் திருவாசகப் பாடலுக்குப் பண்டிதமணி அவர்கள் தமது 'சமயக் கட்டுரைகள்' என்னும் நூலில் விரித்துரைத்த சொற்பொருள் நுட்பங்களைக் குறிப்பிடுக.

---

## இளஞ் சைவப் புலவர் - சாத்திரம்

மூன்றுமணி நேரம்] [மதிப்பெண் நூறு

1. திருவருட்பயனில் திருக்குறளை ஒட்டியமைந்து நினைவூட்டும் செய்யுட்கள் இரண்டைக் குறிப்பிடுக.

2. ஆணவ மலத்தின் இயல்பைத் திருவருட்பயன் எவ்வாறு விளக்குகின்றது ?

3. ஊமன், மீன், பூசை, நகுலம் என்னும் சிற்றுயிர்கள் எவ்வெக் கருத்துக்களை விளக்குதற்குத் திருவருட்பயனில் உவமையாகக் கையாளப் பெற்றன ?

4. திருக்களிற்றுப் படியாரில் வல்வினை, மெல்வினை எனக் குறிப்பிடப்பெற்றவை யாவை? முறையே அவற்றைச் செய்தவர்கள் யார் யார் ?

5. திருக்களிற்றுப் படியாரில் திருக்குறளையும் திருவாசகத்தையும் எடுத்தாளுவதாக வரும் செய்யுட்கள் ஒவ்வொன்றை எழுதுக.

6. அகமார்க்கத்தால் வாதனையை மாற்றிய அடியார்கள் என்று திருக்களிற்றுப் படியார் எவர் எவரைக் குறிப்பிட்டுள்ளது ?

7. திருக்களிற்றுப் படியார் திருவுந்தியாரை அடியொற்றித் தழுவி இயற்றப்பட்டது என்பதனை விளக்கும் சான்றுகளுள் ஒன்று தருக.

8. 'உண்மை விளக்கம்' இயற்றிய ஆசிரியர் யார் ? அவர்தம் ஆசிரியர்பால் எழுப்பிய வினக்கள் யாவை ?

9. ஆன்மதத்துவம், வித்தியா தத்துவம், சிவதத்துவம் என்பன எவையெவை ? முறையே அவற்றின் பெயர்களை மட்டும் குறிப்பிடுக.

10. 'எந்தையார் பரதம்' (அல்லது) 'அஞ்செழுத்தின் அடைவு' பற்றி 'உண்மை விளக்கம்' கூறுவதனை விளக்குக.

---

# இருமுறை வரும் அருட் பாடல்கள்

(கடலூர் - தி. கி. நாராயணசாமி நாயுடு)

தமிழ் இலக்கிய நூல்களில் ஒருநூலில் வந்த பாடல்* மற்றொரு நூலிலும் வரக் காண்கிறோம். பெருந்திரட்டு என்ற தொகை நூலிலே பல பாடல்கள் பல நூல்களின் மூலச் செய்யுள் என்ற முறையில் எந்த நூலைச் சார்ந்தது என்பது திட்டமாகத் தெளிய முடியாமல் இருக்கிறது. அருட் பாடல்களை ஆய்ந்தால் பின்வரும் குறிப்புகள் கிடைக்கின்றன. அப்பர் தேவாரத்தில் :—

திருவிருத்தம் †(4-98-1 ; 5112) 'அந்திவட்ட'ப் பாடல் மீண்டும் (4-113-5; 5222) பாடலாக வந்துள்ளது. இப் பதிகத்தில் (98) 2 பாட்டுக்களே கிடைத்துள்ளன. மற்றவை இறந்து பட்டன. (113)ம் பதிகத்தில் 11 பாடல்கள் இருக்கின்றன.

---

*இரும்பல் காஞ்சி நூலின் 'நீலநெடுங் கொண்மூ' என்ற செய்யுள் களவெண்பாவிலும் வருகிறது. புறத்திரட்டு முன்னுரை.

†4ம் திருமுறை 98-ம் பதிகம், 1-ம் பாட்டு, அடங்கன் முறை தொடர் எண் ம. பா. பதிப்புப்படி 5112.

திருக்குறுந்தொகை [i] (5-14-5 ; 5367) 'வண்டணைக்தன' பாடல் மறுமுறை (5-15-3; 5376) பாடலாக இருக்கிறது. அப்படியே. [ii] (5-15-1; 5374) 'பறையின் ஓசை' பாடல் (5-23-4; 5456). [iii] (5-19-1; 5412) 'தளரும்' பாடல் (5-20-7 ; 5429). [iv] (5-49-9 ; 5642) 'வட்ட மாமதில்' பாடல் (5-52-9 ; 5756).

இப்படித் திருமுறையில் மறுமுறை வந்துள்ளது. குறுந் தொகையில் 15ம் பதிகம் 6 பாட்டுடைய சிதைந்த பதிகம். 14, 19-ம் பதிகங்கள் அப்பர் தேவாரத்தில் பெரிதும் அமைந் துள்ள 10 பாட்டில்லாமல் 11 பாடல்கள் உள்ளவை. இக் குறிப்புகளோடு இவற்றைப் பார்த்தால் எட்டின் பிழை களாயிருக்கலாமோ என்ற ஐயம் ஏற்படுகிறது.

மணிவாசகரின் திருவாசகத்தில் ஒருசில சொல் வேற்று மையோடு திருவேசறவு 6-ம் பாடல் (பஞ்சாய), அச்சோப் பதிகத்தில் 5-ம் பாடலாக இருமுறை வந்தமை அறியலாம். பத்தாம் திருமுறையாகிய திருமந்திரத்தில் (சமாஜ முதல் பதிப்புப்படி)

அகன்றுனகவிட 448-3011
அகாரமுயிரை 975-2503
அண்ணலிருப்பிடம் 766-2660
அதீதத்துளாகி 2452-2582
5 அவ்வுலகத்தே 1652-1869
அறிவறிவென்றங் 2362-2637
அறிவாயசத் 617-2471
ஆகியவச்சோ 2493-2570
ஆதாரசோதனை 1492-1707
10 ஆமத்தினிதிருக் 973-1213
ஆயுமலரின் 1711-2359
ஆவனவாவ 504-2175
ஆறேயருவி 2530-2979
இயைந்தனள் 972-1115
15 இரவும் பகலும் 1134-1528
இராப்பகல் 331-1856
உண்ணீர் அமுதம் 336-882
உணர்ந்தெழுமந்திரம் 1222-1306
உணர்வுடையார் 1786-2938
20 உணர்வுமவனே 2857-3035
உய்ந்தனமென்பீர் 1460-2622
ஊழிதோறூழி 1458-1846
எழுந்துநீர் 72-553
எலுடையாயிறை 1862-2111
25 *ஏனோர் பெருமை 490-2012-3024
ஐம்பதெழுத்தே 965-2698
ஒன்றியஈரெண் 185-863

ஒன்றுமிரண்டு 236-2536
ஒலக்கஞ்சூழ்ந்த 108-540
30 காயக்குழப்பனை 2071-2550
கானுறுகோடி 1452-1848
குறிப்பினினுள் 587-1794
கூடகில்லார் 2093-2559
கொல்லையின் 2016-2903
35 சக்திசிவன்விளை 492-1771
சிவமுதல் 106-990
சைவப்பெருமை 1478-1567
தரிகின்ற 1589-1782
தலைநின்ற 2597-2845
40 தானே இருநில 10-1165
தானே திசை 412-2967
துரியமடங்கிய 2498-2572
தேடுந்திசை 406-414
*தொம்பதந் 2441-2473-2826
45 நின்றது தானும் 403-438
பின்னெய்த 1586-1629
போகின்றவெட்டு 457-2926
போற்றுகின்றேன் 884-2988
மண்ணொன்று 440-2351
50 விந்துநாதமும் 961-1971

இப்படி 50 பாடல்கள் கிடைப்பது திருமந்திரத்தின் பாடல் தொகை 3000 என்பதைக் காணக் கழிக்க உதவுகிறது.

நாலாயிரப் பிரபந்தத்தில் இயற்பாவில் பூதத்தாரின் இரண்டாம் திருவந்தாதியில் 'கடைநின்று' (2192) என்ற பாட்டு திருமழிசையாழ்வாரின் நான்காம் திருவந்தாதியில் (2436)ம் பாடலாக வருகிறது. இப்பாடல்களில் சொல் மாற்றம் சிறிதுமில்லை. அப்படியே, அதே இயற்பாவில் முதல் இருவரிகளின் வேற்றுமையைச் சில பாடல்களிற் காணலாம். 'உளன் கண்டாய்' என்ற செய்யுள் 2180, 2321, 2457-ம் பாடல்களாக மும்முறையும், 'எனக்கு ஆவார்' என்ற செய்யுள் 2170, 2432-ம் பாடலாக இருமுறையும் வருகிறது. இதற்கு வியாக்கியானம் (விரிவுரை) வகுத்தவர்கள் அப்படியே மூலத்தைக் கொண்டிருக்கிறார்கள். இவையாவும் நான்கு அந்தாதிகளில் வருவனவே. இவற்றில் முதல் மூன்று அந்தாதிகள் 100 பாட்டுகள் உடையன. ஓலையில் உள்ள தலைப்புப்படி நான்காம் திருவந்தாதியாகிய 'நான்முகன்' என்று தொடங்கும் அந்தாதியில் 96 பாட்டுக்களே உள்ளன என்பது சிந்தித்தற்குரியது.

---

*மூன்றுமுறை வந்த பாடல்.

## "சித்தாந்தம்" மலர் 34 இதழ் 1

1961 ஜனவரி மாதம் 10ல் வெளிவரும். அந்தத் தேதிக்குள் ரூபா மூன்றைக் கீழ்க்காணும் முகவரிக்கு அனுப்பிவிடுமாறு கேட்டுக்கொள்கிறேன். வி. பி. மூலம் அவ்விதழை அனுப்புவதால் அங்கத்தினர்களுக்கு 67 புதுக் காசு (நையே பைசே) அஞ்சல் செலவு அதிகம் ஆகிவிடும். சந்தா ரூபா மூன்றை அனுப்பவேண்டிய முகவரி :—

செயலாளர், சைவ சித்தாந்த மகா சமாஜம்,
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

---

## சைவ சித்தாந்த மகா சமாஜ வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| பெரிய புராணம் | ... | 3 | 00 |
| திருவெம்பாவை – திருப்பள்ளியெழுச்சி - சமாஜப் பொன்விழா வெளியீடு (இரண்டாம் பதிப்பு) ராப்பர் பைண்டு | ... | 1 | 25 |
| ஷை கலிக்கோ பைண்டு | ... | 1 | 75 |
| முருகன் முந்நூல்—உரையுடன் | ... | 0 | 40 |
| ஞானியார் அடிகள் நினைவு மலர் | ... | 2 | 00 |
| சைவ சமயச் சொற்பொழிவுகள் | ... | 3 | 00 |
| திருப்போரூர்ச் சந்நிதி முறை | ... | 0 | 75 |
| கந்தானுபூதி—யந்திரங்களுடன் கூடிய உரை | ... | 1 | 25 |
| சமாஜப் பொன்விழா மலர் | ... | 0 | 50 |
| சிவஞான போதம் (எளிய உரை) | ... | 0 | 12 |
| குகார்ச்சனைத் திருமந்திரம் | ... | 0 | 06 |
| அறுபத்துமூவர் | ... | 0 | 06 |

கிடைக்குமிடம் :—

சைவ சித்தாந்த மகா சமாஜம்,
14, வாரன்சாலை, மயிலாப்பூர், சென்னை–4

# திருவாலங்காடு

"சைவநெறிக் காவலர்"
டாக்டர் மா. இராசமாணிக்கனுர், எம்.ஏ., எம்.ஓ.எல்., பிஎச்.டி.

பழையனூர்-ஆலங்காடு : இது சென்னைக்கு மேற்கில் 37 கல் தொலைவிலுள்ள திருவாலங்காடு புகைவண்டி நிலையத்திற்கு வட கிழக்கில் மூன்று கல் தொலைவில் இருக்கிறது. இது ஐந்து சபைகளில் ஒன்றாகிய இரத்தின சபையை உடையது ; சிவபெருமான் காளியுடன் நடனம் செய்தருளிய இடமாகும். "ஆடினார் காளி காண ஆலங் காட் டடிக ளாரே" என்பது அப்பர் தேவாரம்.

ஒரு காலத்தில் பழையனூரில் கோவில் கொண்டுள்ள காளி மிகுந்த கொடியவளாக இருந்தாள். அவளது செருக்கை அடக்கச் சிவபெருமான் தேவர்கள் முன்னிலையில் அவளோடு நடனப்போட்டியில் இறங்கினார். போட்டியின் முற்பகுதியில் காளி வெற்றிபெறுவாள் என்பது தோன்றிற்று. அதனால் சிவபெருமான் தமது ஒரு காலைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு பம்பரம்போல் சுழன்று ஆடினார். காளி பெண் தெய்வம் ஆதலால் தேவர்கள் முன்னிலையில் சிவனைப்போல் ஒரு காலை உயரத்தூக்கி ஆட முடியவில்லை. நடனப் போட்டியில் சிவன் வென்றதாகக் காளியே ஒப்புக்கொண்டாள் என்பது வரலாறு.

பழையனூரை அடுத்து இருந்த ஆலங்காட்டில் கோவில் ஏற்பட்டதால், இக் கோவில் உள்ள இடம் பழையனூர் - ஆலங்காடு எனப் பெயர்பெற்றது.

இக்கோவிலை அடுத்த திருக்குளம் பெரியது. இதற்கு வட கிழக்கிலும், கோவிலுக்கு வட மேற்கிலும் காளி கோவில் இருக்கிறது. இது, காரைக்கால் அம்மையார் கயிலையிலிருந்து தலையால் நடந்துவந்து இறைவரைத் தரிசித்து அவருடைய தூக்கிய திருவடியின்கீழ்ச் சிவானந்தத்தை அநுபவித்துக்கொண்டிருக்கும் தலமாகும். இத் தலம் அம்மையார் அருளிச்செய்த திருப்பதிகத்தைப் பெற்றுள்ளது ; அப்பர், சம்பந்தர், சுந்தரர் பாடல்களையும் பெற்றுள்ளது.

பழையனூர், கோவிலுக்குக் கிழக்கில் ஒரு கல் தொலைவில் உள்ளது.

ஒரு காலத்தில் பிராமணன் ஒருவன் தன் மனைவியோடு வாழ்ந்துவந்தான். அவன் பரத்தையின் சேர்க்கையால் தன் செல்வத்தை இழந்தான். அவன் மனைவி தன் பெற்றோருடன் வாழ்ந்துவந்தாள். கணவன் தன் மனைவியின் நகைகளைக் கவர எண்ணினன்; தன்னுடன் இனி அமைதியாக வாழலாம் என்றுகூறித் தன் மனைவியை அழைத்துவந்தான்; வழியில் அவள் அணிந்திருந்த நகைகளையெல்லாம் எடுத்துக் கொண்டு, அவளையும் அவள் குழந்தையையும் ஒரு கிணற்றில் தள்ளிவிட்டான்.

அடுத்த பிறவியில் அப் பிராமணன் ஒரு வணிகனாகப் பிறந்தான். ஒரு முனிவர், 'நீ வாணிகத்தை முன்னிட்டு வடக்கு நோக்கிச் செல்லாதே. அங்கு முன் வினைப்பயன் உன்னைக் கொன்றுவிடும். இந்த வாள் உன்னை எப்போதும் காக்கும், இதனை எடுத்துச்செல்' என்று அவ்வணிகனைப் பார்த்துக் கூறினர்.

ஒருநாள் அவ்வணிகன் பழையனூருக்குச் சென்றான். அவ்வழியில் சுற்றிக்கொண்டிருந்த நீலி என்னும் பேய் அவன் மனைவியின் வேடம்கொண்டு கைக் குழந்தையுடன் அங்குத்தோன்றியது. பழையனூர்வேளாளர் எழுபதுபேர் முன்னிலையில் அப்பெண் முறையிட்டாள்: "இவர் என் கணவர். இவர் என்னைத் துறந்து பரத்தையுடன் வாழ்கிறார். இவரை என்னுடன் வாழ விடுங்கள்" என்றாள். வணிகன் அவளைத் தனக்குத்தெரியாது என்றான். வேளாளர் அவனை அவளுடன் வாழும்படி வற்புறுத்தினர். அவன் தன் உயிருக்கு ஆபத்து நேரின், அவர்கள்தாம் பொறுப்பாளிகள் என்று கூறினன். அவர்கள், "அஞ்சேல், உன் உயிர் போகுமாயின், நாங்கள் எழுபதுபேரும் தீயில்விழுந்து இறப்போம்" என்று வாக்களித்தனர்.

பின்பு வணிகன் அப்பெண்ணுடன் ஒரு வீட்டில் தங்கினன். மனைவியின் வேண்டுகோளின்படி, முனிவர் தந்த வாளை வேளாளர் வணிகனிடமிருந்து வாங்கிக்கொண்டனர். இதனால் வணிகனுக்குப் பாதுகாப்பு ஒழிந்தது. ஓர் இரவு அவன் நீலியால் கொல்லப்பட்டான். பொழுது விடிவதற்குள் நீலியும் குழந்தையுடன் மறைந்துவிட்டாள்.

பொழுது விடிந்தது. வணிகன் இறந்து கிடப்பதைக் கண்ட வேளாளர் எழுபதின்மரும் வணிகனுக்குத் தாம் வாக்களித்தபடியே தீயை வளர்த்து அதில் விழுந்து இறந்தனர்.* அவர்கள் தீயிற்பாய்ந்து உயிர்விட்டதற்கு அடையாளமாக அங்கு நினைவுச்சின்னம் காணப்படுகிறது. பழையனூர் வேளாளர் தாம் கொடுத்த வாக்கைக் காக்கத் தம் உயிரைக்கொடுத்த சிறப்பினைப் பாராட்டித் திருஞான சம்பந்தர், 'துஞ்ச வருவாரும்' என்னும் திருவாலங்காட்டுப் பதிகத்திற் குறித்துள்ளார்.

"துஞ்ச வருவாருந் தொழுவிப் பாரும் வழுவிப்போய்
நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப் பாரும் முனைநட்பாய்
வஞ்சப் படுத்தொருத்தி வாணாள் கொள்ளும் வகைகேட்
டஞ்சும் பழையனூர் ஆலங் காட்டெம் மடிகளே."

பழையனூரில் சாட்சிபுரீசுவரர் கோவில் என்ற ஒரு கோவில் இருந்தது. அஃது இன்று அழிந்து கிடக்கிறது. எழுபது வேளாளர் அக்கடவுளைச் சான்றாகவைத்து வணிகனுக்கு வாக்களித்தனர். ஆதலால் அக்கோவில் சிவலிங்கத்திற்குச் சாட்சிபுரீசுவரர் என்பது பெயராயிற்று. அக்கோவிலைப் பழுதுபார்க்க அதிகாரிகளும் பொதுமக்களும் முனைந்துள்ளனர்.

கல்வெட்டுக்கள் : திருவாலங்காட்டுக் கோவிலில் 46 கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இது காரைக்கால் அம்மையார் பாடிய சிறப்புடையது. அவ்வம்மையார் கி. பி. 5 அல்லது 6-ஆம் நூற்றாண்டினராவர். பல்லவ நிருபதுங்க வர்மன் முதல் 15-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த விசயநகர வேந்தர் வரையிலும் நாடாண்ட மன்னர் பலருடைய கல்வெட்டுக்கள் இக்கோவிலில் காணப்படுகின்றன. எனவே, இக் கோவில் கி. பி. 5 அல்லது 6-ஆம் நூற்றாண்டு முதல் கி. பி. 15-ஆம் நூற்றாண்டு வரையில்—ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகள் சீரும் சிறப்பும்பெற்று இருந்தது என்பது தெளிவாகும்.

கல்வெட்டுக்களிற் கண்ட மன்னர்கள் : நிருபதுங்க பல்லவன் கி. பி. 850-880; முதலாம் இராசராச சோழன்

---

*இவ்வரலாற்றை நீலகேசியிற் காண்க.

கி. பி. 985-1014; முதலாம் இராசேந்திர சோழன் கி. பி. 1012-1042; முதலாம் இராசாதிராசன் கி. பி. 1018-1054; முதற் குலோத்துங்கன் கி. பி. 1070-1122, விக்கிரம சோழன் கி. பி. 1122-1135; இரண்டாம் இராசாதிராசன் கி. பி. 1163-1179; மூன்றும் குலோத்துங்கன் கி. பி. 1178-1218; மூன்றும் இராசராசன் கி. பி. 1216-1246; சடையவர்மன் சுந்தரபாண்டியன் கி. பி. 1258-1293; இரண்டாம் தேவராயர் கி. பி. 1422-1432; மல்லிகார்ச்சுன மகாராயர் கி. பி. 1432-1450; சாளுவ திப்பைய தேவ மகாராயர் கி. பி. 1441; கிருஷ்ணதேவராயர் கி. பி. 1509-1529; சதாசிவ ராயர் கி. பி. 1534-1551; திருமலைதேவ மகாராயர் கி. பி. 1571.

வரலாறு: சங்க காலத்தில் தொண்டைநாடு இருபத்து நான்கு கோட்டங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு கோட்டத்திற்கும் ஒரு தலைநகர் இருந்தது. அத்தலைநகரில் கோட்டை இருந்தது. ஒவ்வொரு கோட்டத்திலும் குறும்பர் தலைவன் ஒருவன் ஆண்டுவந்தான் என்று கூறலாம். கீழ்வருவன இருபத்துநான்கு கோட்டங்களாகும்.

(1) புழல் கோட்டம், (2) ஈக்காட்டுக் கோட்டம், (3) மணவிற் (மணவூர்க்) கோட்டம், (4) செங்காட்டுக் கோட்டம், (5) பையூர்க் கோட்டம், (6) எயில் கோட்டம், (7) தாமல் கோட்டம், (8) ஊற்றுக்காட்டுக் கோட்டம், (9) களத்தூர்க் கோட்டம், (10) செம்பூர்க் கோட்டம், (11) ஆம்பூர்க் கோட்டம், (12) வெண்குன்றக் கோட்டம், (13) பல்குன்றக் கோட்டம், (14) இளங்காட்டுக் கோட்டம், (15) கலியூர்க் கோட்டம், (16) செங்கரைக் கோட்டம், (17) படுவூர்க் கோட்டம், (18) கடிகூர்க் கோட்டம், (19) செந்திருக்கைக் கோட்டம், (20) குன்றவட்டான் கோட்டம், (21) வேங்கடக் கோட்டம், (22) வேலூர்க் கோட்டம், (23) சேத்தூர்க் கோட்டம், (24) புலியூர்க் கோட்டம்.

குறும்பர் ஆட்சிக்குப் பிறகு தொண்டைநாடு திரையர் ஆட்சிக்கு உட்பட்டது. வட தொண்டை நாட்டைத் திரையன் என்பவன் பவத்திரி (இன்றைய கூடூர் வட்டத்திலுள்ள ரெட்டிபாளையம்) என்னும் நகரத்திலிருந்து

அரசாண்டான். திரையனின் சார்பாளனாக இளந்திரையன் என்பவன் தொண்டைநாட்டின் தென்பகுதியை ஆண்டு வந்தான். அவனுக்குத் தலைநகர் காஞ்சிபுரம் என்பது. இது சங்கநூல் கூறும் செய்தியாகும்.

கரிகாற்சோழன் தொண்டை நாட்டைக் கைப்பற்றினான்—காடு கெடுத்து நாடாக்கினான் என்று பட்டினப் பாலை முதலியன பகர்கின்றன. மணிமேகலை வாழ்ந்த காலத்தில் இளங்கிள்ளி என்பவன் சோழச் சார்பாளனாகக் காஞ்சியில் இருந்து தொண்டை நாட்டை ஆண்டுவந்தான் என்று மணிமேகலைக் காவியம் கூறுகின்றது. தொண்டை நாடு ஏறத்தாழக் கி. பி. முந்நூறு முதல் தொள்ளாயிரம் வரையில் பல்லவர் ஆட்சியில் இருந்துவந்தது. பின்பு கி. பி. 1300 வரையிற் சோழப் பேரரசர் ஆட்சியில் இருந்து வந்தது; அதன் பின்பு விசயநகர் வேந்தர் ஆட்சியில் இருந்தது என்பன வரலாறு கண்ட உண்மைகளாகும்.

கி. பி. 18, 19-ம் நூற்றாண்டுகளில் கருநாடகப் போர்கள் தமிழகத்தில் நிகழ்ந்தன. அக்காலத்தில் திடீர்ப் படையெடுப்புக்கள் பல நடைபெற்றன. அதனால் ஒவ்வொரு கோவிலும் ஒரு கோட்டையாகப் பயன்படுத்தப் பெற்றது. உயர்ந்த மதில்கள், அகன்ற திருச்சுற்றுக்கள் அமைந்த கோவில்கள் கோட்டைக்குரிய பாதுகாப்புக்களைப் பெற்றன. சில முக்கிய கோவில்களைச் சுற்றிலும் அகழி வெட்டப்பட்டது. இக் கோட்டைக் கோவில்களுள் கருநாடக நவாபின் படைகளும் பிரெஞ்சியர் படைகளும் ஆங்கிலர் படைகளும் மாறிமாறித் தங்கிப் போரிட்டன என்பது வரலாற்றால் அறியப்படும் உண்மையாகும்.

திருவாலங்காட்டுச் செப்பேடுகள் : முதலாம் இராஜேந்திர சோழன் ஆறும் ஆட்சி ஆண்டில் திருவாலங்காட்டுச் செப்பேடுகள் வெளியாயின. அவை 31 செப்பேடுகள். அவற்றுள் 10 வடமொழியிலும், 21 தமிழிலும் எழுதப்பட்டன. அவற்றில் சோழர்பரம்பரை—சங்ககாலம் முதல் முதலாம் இராஜேந்திர சோழன் காலம்வரையில் தரப்பட்டுள்ளது. சோழ மன்னர் பெயர்களுள் பெருநற்கிள்ளி, கரிகாலன், கோச்சோழன், அவன்மகன் நல்லடிக் கோன் முதலியவர்கள் பெயர்களும் அவர்பெற்ற வெற்றி

களும் குறிக்கப்பட்டுள்ளன. பிற்காலச் சோழர் வெற்றிகள் விளக்கமாகக் குறிக்கப்பட்டுள்ளன. திருவாலங்காட்டுச் சிவன்கோவிலுக்குப் பழையனூர்க் கிராமத்தைத் தேவதானமாக வழங்குவதற்கே இச்செப்பேடுகள் தோன்றின. இவை சோழர் மரபையும் அவர்தம் வெற்றிகளையும் அறியப் பெருந்துணை புரிவனவாகும்.

கல்வெட்டுச் செய்திகள் : சோழர் காலத்துத் தமிழகத்தில் கோவில் திருப்பணிகள் மிகுந்து விளங்கின. பேரரசர், சிற்றரசர், அரசாங்க அலுவலர், உழவர், வணிகர், தேவரடியார் முதலிய பலரும் சைவ சமயத் திருப்பணியில் ஈடுபட்டு இருந்தனர். இந்த நிலை திருவாலங்காட்டிலும் இருந்தது என்பதைப் பல கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன.

விளக்குத் தானம் : கோவிலில் விளக்கு எரிக்க மக்கள் பணம், ஆடுகள், பசுக்கள், எருமைகள், நிலம் முதலியவற்றை வழங்கினர். கோவிலில் விளக்கு எரித்தல் பற்றிய கல்வெட்டுக்களே ஒவ்வொரு கோவிலிலும் மிகுதியாகக் காணப்படுகின்றன. எனவே, கோவிலில் விளக்கெரித்தல் சிறந்த அறப்பணியாகக் கருதப்பட்டது என்பது தெரிகிறது அன்றோ ?

கோவிலில் பலவகை விளக்குகள் எரிக்கப்பட்டன. அவை (1) சாதாரண விளக்கு, (2) நந்தா விளக்கு, (3) சந்தி விளக்கு எனப் பலவகைப்பட்டன. (1) சாதாரண விளக்கு என்பது பூசை நேரங்களில் மட்டும் ஏற்றப்படும் விளக்கு எனக் கொள்ளலாம். (2) நந்தா விளக்கு என்பது எப்பொழுதும் எரிந்துகொண்டிருக்கும் விளக்காகும். (3) சந்தி விளக்கு என்பது காலை மாலைச் சந்திகளில் மட்டும் எரிக்கப்படுவது வழக்கம்போலும் !

திருவாலங்காட்டுக் கோவிலில் சாதாரண விளக்குகளும் நந்தா விளக்குகளும் பல எரிக்கப்பட்டன. ஒரு விளக்கு எரிக்க 12 ஆடுகள் கோவிலுக்கு விடப்பட்டன ; மற்றொரு விளக்கு எரிய 16 பசுக்கள் விடப்பட்டன. சில நந்தா விளக்குகள் எரியச் சில வரிகளின் வருவாய் கோவிலுக்குத் தரப்பட்டது. சில விளக்குகள் எரிக்கப் பொன் தானமாகக் கொடுக்கப்பட்டது.

பிற தானங்கள் : கோவிலுக்குச் சில ஊர்களில் நில தானம் செய்யப்பட்டது. மணவூர்க் கோட்டத்து மணவூர் நாட்டு மணவூர்க் கிராமத்தில் ஒரு நிலம் கோவிலுக்குத் தானமாக விடப்பட்டது. நிருபதுங்க பல்லவன் மனைவியாகிய காடவன் மாதேவியார் கோவிலுக்கு 108 கழஞ்சு பொன் தானம் செய்தாள். கம்பண உடையார் காலத்தில் கோவிலுக்கு நிலம் தானம் செய்யப்பட்டது. சதாசிவ ராயர் காலத்தில் ஆண்டு தோறும் விழா நடத்துவதற்குப் பணம் தானம் செய்யப்பட்டது. மூன்றும் குலோத்துங்கன் காலத்தில் பூசைக்காக எழுபது காசு கோவிலுக்குக் கொடுக்கப்பட்டது. சாளுவ திப்பையதேவ மகாராயர் காலத்தில் கோவிலில் வெண்கலக் கொடிக் கம்பம் செய்து நிறுத்தப்பட்டது.

இறைவன்-இறைவி பெயர்கள் : திருவாலங்காட்டுக் கோவிலில் நடன நிலையில் உள்ள இறைவர் பெயர் - அண்டமுற நின்றருளின நாயனர் என்பது. சிவலிங்கத்தின் பெயர் - திருவாலங்காடுடைய நாயனர் என்பது. அம்மன் பெயர்கள் திருக்காமக் கோட்டத்துப் பெரிய நாச்சியார், வண்டார்குழல் நாச்சியார் என்பன.

பிற செய்திகள் : நிருபதுங்க பல்லவன் காலத்தில் பிருதிவீமாணிக்க உரி என்னும் முகத்தலளவைப் பெயர் வழக்கில் இருந்தது. (2 உழக்கு=1 உரி=$\frac{1}{2}$ படி). பிருதிவீ மாணிக்கம் என்பது நிருபதுங்க பல்லவன் மனைவியருள் ஒருத்திக்குப் பெயராகும். அவ்வம்மையின் பெயர் முகத்தளவைக்கு ஆகிவந்தது. இரண்டாம் இராசாதிராசன் கல்வெட்டில் (465 of 1905) பாண்டியர் ஆட்சி பெறுவது பற்றி உண்டான பூசல்பற்றிய செய்திகளும் இலங்கைப் படைகளின் படையெடுப்பும் குறிக்கப்பட்டுள்ளன. முதற் குலோத்துங்கன் கல்வெட்டில் நிலம் அளந்தசெய்தி காணப்படுகிறது. மணவூர்க் கோட்டத்துக் கோட்டூரில் திருவாலங்காட்டுக் கோவிலுக்கு நில தானம் செய்யப்பட்டது. கி. பி. 13-ஆம் நூற்றாண்டில் திருச்சுற்று மதில் அம்மையப்பன் பழியஞ்சிய பல்லவ்ராயன் என்னும் அதிகாரியால்

(அல்லது சிற்றரசனுல்) கட்டப்பட்டது என்று ஒரு கல்வெட்டுக் கூறுகிறது.

சோழர் ஆட்சி முடியும்வரையில் திருவாலங்காடு மணவூர்க் கோட்டத்துப் பழையனூர் நாட்டுந் திருவாலங்காடு என்று பெயர்பெற்றிருந்தது ; பின்பு விசயநகர வேந்தர் ஆட்சிக் காலத்தில் சந்திரகிரி ராச்சியத்துத் திருவாலங்காடு என்று பெயர்பெற்றது. மூன்ரும் குலோத்துங்கன் காலத்தில் அருணிலை விசாகன் திரைலோக்கிய மல்லன் வத்சராசன் என்பவன் நடராசர் அரங்கில் விளக்கு எரிக்கத் தானம் செய்தான். அவன் குன்றவர்த்தனக் கோட்டத்து இல்லத்தூர் நாட்டு அரும்பாக்கம் என்ற ஊரினன். அவன் பாரதத்தைத் தமிழில் பாடியவன் என்று கல்வெட்டுக் கூறுகிறது. (482 of 1905).

ஊர்ப்பெயர்கள் : ஊற்றுக்காடு என்ற அழகிய சோழநல்லூர், வடகரை மணவூர்க் கோட்டத்து மேல்மலைப் பழையனூர் நாட்டுப் பழையனூர், புலியூர்க்கோட்டத்துத் திருமயிலாப்பில் (மயிலாப்பூர்) இராசராசப் பாண்டிநாட்டுப் புறப்பறளை நாட்டுக் கள்ளிகுடி, வளைகுளம் என்ற நித்தவிநோதச் சதுர்வேதி மங்கலம், எயிற்கோட்டத்துப் புள்வேளூர், மணவூர்க்கோட்டத்துக் குன்றூர் நாட்டுக் கோட்டூர், படுவூர்க் கோட்டத்து ஒழுகையூர் நாட்டு வள்ளுவன் பாக்கம், நடுவில் மலைப்பெருமூர் நாட்டுப் பெருமூர், நடுவில் மலைப்பெருமூர் நாட்டுச் சிங்களாந்தகச் சதுர்வேதி மங்கலம், மேல்மலை வேலூர் நாட்டு நித்தவிநோதச் சதுர்வேதி மங்கலம்.

மக்கட் பெயர்கள் : காடவன் மாதேவியார், பிருதிவீ மாணிக்கம், திக்கரசன், அம்மையப்பன், பழி அஞ்சிய பல்லவராயன், வேதவனமுடையான், திரைலோக்கிய மல்லன், அரியப்பன், அருணிலை விசாகன், இராசேந்திர சிங்க மூவேந்த வேளான், பொன்னம்பல தர்ம சிவாசாரியார்.

---

# திருநெறி விளக்கம்*

(மலர் - 33; இதழ் - 11; 352-ம் பக்கத் தொடர்ச்சி)

**வேறு**

சொற்றன னருளி னுண்மை சொல்லுவ னுயிரின் றன்மை
யுற்றிடு மைய வத்தை யுணர்த்துதல் ஞான வாய்மை
தற்றெரி சனந்தற் சுத்தி சாற்றரு மான்ம லாபம்
அற்றமி லீஞ்செ ழுத்தோ டணைந்தவர் தன்மை தானே. (57)

அவையவ மதனு ளெய்தி யைம்புலன் பொறியாற் பற்றி
யவையவை யாக வுற்றுற் றறியினு மறியுஞ் செய்தி
யெவையுமற் றவத்தை யெய்து மெய்கினு மதீத முண்மை
நவையறு முயிருக் கென்று நாட்டுவர் வீட்டி னின்றோர்.

புரமறி விலாமை யானும் புலன்றொறு மறித லானும்
கரணநான் கதனி லுற்ற வவன்து கவர்த லானும்
சாரமுறு பிராண வாயுத் தான்சட மாத லானும்
உருவுறு சேத னன்றான் உணர்வினு லுணரு மன்றே. (59)

போதமேற் பொறியென் போதம் அன்றெனிற் புலன்களார்க்குப்
போதநின் றுதவு மென்னிற் புகன்றவை சடங்க ளாகும்
ஆதியிங் குயிர்க்குப் போத மளிப்பனென் றறைநயி லாவி
சேதன மன்று மண்ணல் செடத்தினுக் கறிவி யானே. (60)

போதமே தறிந்த வந்தப் பொருள்சட மாத றிண்ணம்
போதமெய் யறியா தாகிற் பெறுபொருள் பொய் புகன்ற
போதமெய் யருளே முக்திப் பொய்யினை மெய்யாக் காணும்
போதமெய் யசத்து மற்றப் போதநிற் புலப்ப டாதே. (61)

வதசத் தறிந்த போத மென்றிட லுயிரன் றெங்கோன்
ஆதியிற் றுன்ச டங்கட் கறிவில திவையு மற்றைச்
சேதனன் றுனும் சேரிற் றெரியாசிற் சத்தி காணு
ஆதியுஞ் சடமு மென்னில் அருக்கனு மிருளுங் கூடா. (62)

---

*தஞ்சைச் சரசுவதி மகால் நூல் நிலைய ஏட்டுப் பிரதிகளினின்று எடுத்து வெளியிடப்பெறுவது—தீ. கி. நா.

சித்தினை யசித்துக் காணு சித்தினுக் கறிய வேண்டா
சித்தையு மசித்தை யுந்தான் தெரிசித்தி னுண்மை பேசு
சித்தகழ் தமமு மல்லா வான்விழி போலும் வாய்மை
சித்தினி னின்ற சித்தைத் தேர்தலாற் சிதசித் தாமே. (63)

நோக்கொளி நோக்கில னாகின் நோக்கினுக் கொளிமுன் பில்லை
நோக்கொடு தீப பேத நுவன்றிடிற் பிறந்து காணு
நோக்கொளி சென்று தீப நுடங்கொளி யடங்கி னாலு
நோக்கொளி காணுந் தீப நுடங்கொளி காட்டு மன்றே.(64)

தங்கிய வேக தேசந் தனுவெலா நிறைந்து நிற்றல்
எங்குமா யிருத்தல் தானே யாவையு மாத லெல்லாம்
அங்கசித் துணர்த்த லென்ப தறைந்திடா மறைக ளான்மாப்
பங்கற வுணர்தல் பஞ்ச நிறமகல் படிகம் போல. (65)

கரிபரி தேர்ரோ டாளாற் காவலன் பவனி போந்திட்
டுரியமா ளிகையின் வாயில் தொறுந்தொறு முற்ற காவல்
புரிய வந்தப் புரத்துட் புகுதல்போற் பிராண காவல்
திரியஐ யவத்தை மெய்யிற் படுமுயிர் சிவன்று னாலே. (66)

நனவினின் முப்பத் தைஞ்சு நண்ணிடு நெற்றி தன்னில்
கனவினி லிருபத் தைஞ்சு களத்தினிற் சித்தந் தன்னில்
நினைவுறு சுழுத்தி மூன்று நீடிய துரிய நாபி
தனிலிரண் டதீதந் தன்னில் சாற்று மூலத்தி லொன்றே.(67)

எண்ணுசாக் கிராதி சொல்லி லிருதிற மாகுங் கீழ்மேல்
நண்ணுசாக் கிராதி யாக நவிலுமுற் பவத்தை யொன்று
பண்ணுமொன் றருளி லுய்க்கும் பரமசாக் கிராதி யாலே
யண்ணுவர் பிறப்பை நீக்கி யரனடி யடைய லுற்றார். (68)

சாக்கிர நிலைமை யின்கட் சார்தரும் அவத்தை யைந்து
நோக்கிடி லதீத மாகி யாகவே நோக்கி யங்கண்
போக்கருங் கருவி யோடப் புகுதருங் கருவிப் பொற்பை
நீக்கமில் பரமந் தன்னில் நிலைதொறு நின்று பார்நீ. (69)

இருடரு மதித மொன்றில் இரண்டனிற் றுரிய மூன்றில்
தெரிதரு சுழுத்தி நான்கிற் றிகழ்தருங் கனவ தஞ்சில்
விரிதரும் சாக்கி ரம்பின் விளங்கிடும் என்பர் மிக்கோர்
சரிதருங் கீழ்மே லாக விரண்டையும் புந்தி செய்யே. (70)

கருவியில் விடயத் தானும் காண்பவன் ருனு மந்தக்
கருவியு மற்று நிற்றல் கேவலஞ் சகலங் காட்டும்
கருவியில் விடயந் துய்த்தல் சுத்தம தென்று கண்ணிற்
கருவியி னின்மை யான கேவல சகலங் காண்டல். (71)

சத்திய போத மாய்த்தற் காண்டல்சாக் கிரம தாகும்
சுத்தமெய்ப் பரையைக் காண்டல் சுவனமாஞ் சுழுத்தி சொல்லில்
மெய்த்தகு பரையாய் மேவல் துரியமே யின்ப மாதல்
அத்தகு மின்ப மேவீ டதித மென்றறிந்து கொள்நீ. (72)

பொறிகளி லொன்று பஞ்சபூ தங்க டன்னி லொன்றும்
அறிதரு கரண நான்கு மறிவிக்குங் கலாதி யேழும்
குறிதரு சுத்த மைந்தும் கூடியோர் புலனை யுண்பன்
அறிவுரு னிவனு லொன்றை யிவனெழிந் தவையு மாங்கே.

சிற்றறி வறியான் ருனுச் செடங்களை யறிந்து சேரான்
சிற்றறி வறியான் கண்ணிற் செடத்திற னறிந்து சேரா
சிற்றறி வறியான் றன்மை சேர்ந்ததே வடிவாய் நிற்றல்
சிற்றறி வறியான் றன்னுல் சேர்புலன் ஆர்வ னன்றே (74)

இறையவ னறிவு கொண்டே யிவனறி வுறுவ னென்னில்
இறையவன் முதலி யன்ருய் இவன்பெரு முதலி யாவன்
இறையவ னிவனுக்காய் நின்றி யாவையு மறிவ னென்னில்
இறையவ னிருக்க மற்றில் இவன்பிறந் திறத்த லென்னே.

வெய்யவ னன்றி யொன்றும் விளங்கிடா விழிகள் போல
வையன தருளை யன்றி யாருயி ரறியா தொன்றும்,
பையுள்செய் யிருளைப் பாற்றிப் பரிந்துயிர் பற்ருய் நிற்குந்
துய்யமெய் யருளை யின்றி வேறுயிர்த் துணையொன் றின்ரும்.

அறிவினுற் பொறிக ளந்தக் கரணமற் றறிந்திட் டாலும்
அறிவினு லறியுஞ் செய்தி யவற்றினுக் கின்மை போல
அறிவுதான் அவன்ற னுலே யறியினு மறியா தண்ணல்
அறிவுதான் வினைகள் யாவும் அறிந்துயிர்க் கருத்து மன்றே.

ஒன்றிடுங் கரண மின்றே லொன்றையு முணரொ ணுதாம்
ஒன்றிய விவற்ரு லண்ணல் உண்மையை யுணர வொண்ணு
ஒன்றுமி லவனே யுன்போல் உருவெடுத் தருளால் வந்திட்டு
ஒன்றுநன் னிலையி லுய்க்கு முபாதியை யொழித்தல் செய்தே.

பற்றிய நிறங்க ளாகும் பளிங்கின தொளியும் பற்றி
நிற்றலைப் பளிங்கும் வெய்யோன் நீடொளி யதுவும் போல
முற்றுல கதற்குச் சார்வாய் முற்றிலும் முந்நீர் விண்போற்
சிற்றனற் சடங்க டோயா தென்பர் சிற்சத்தி தேர்ந்தோர்.

இருளுயி ரான காலை யாவையு மிருளாய் நின்ற
பொருளது புரைய வெங்கும் புரைவற நிறைந்த வுண்மை
அருளுயிர் விரவி யெல்லாம் அருளொளி யாகி நிற்கும்
மருள்தெரு ளிரண்டி னுக்கும் மருள்தெரு ளிரண்டு மின்றே.

சாற்றுதற் றெரிச னந்தற் சுத்திதன் னிலாப மென்ன
போற்றுமூ வகையே தென்று புகன்றிடிற் பாச நீங்கத்
தோற்றரு ஞானம் வந்து தோற்றலைந் தொழில் துடைத்தல்
மாற்றலின் ஞேயத் தழுத்தல் என்று நூல் வகுக்கு மன்றே.

சுட்டறி வறிவி னுண்மைச் சொரூபமென் றுலும் போய்ச்
சுட்டறி வறிவாய்க் கொண்டு துன்பமோ டின்பந் துய்க்குஞ்
சுட்டறி வறியு முண்மைச் சுத்தபோ தத்தாற் றன்னைச்
சுட்டறி வறியு மந்தச் சுட்டறும் அறிவாய் நின்றே. (82)

சார்வறி வதனைக் காட்டச் சத்திய வறிவி னின்று
சார்வறி வதுவாய் நின்ற தன்னையுந் தானாய் நிற்கும்
சார்வறி வினையங் கண்ட தன்னையு மிறந்து போதஞ்
சார்வறி பரையே யாதி... (83)

என்றவிப் பரையே யன்றி யிதன்முத னிகழ்த்த லென்தான்
என்றிடி லதுபே ரின்ப விறைவன தருளா மென்னின்
துன்றொளி தனிநி லாப்போற் றுணைவனிங் கிதற்கு மூல
மொன்றுமில் பரன்றன் சத்தி யிதென வுணர்த்தும் நூலே.

சின்மய மான வுண்மைச் சிவைசிவ மின்றி யுண்மைப்
பன்மறை பகரும் வெய்யோன் பாயொளி யிருளைப் பாற்றித்
தன்முத லதனைக் காட்டுந் தன்மையின் மலம கற்றி
நின்மல முதலை யாவிக் கருளுமந் நிலைமை தானே. (85)

பூசுரர்க் கடிய சத்தன் றன்னிடைப் பொருந்தல் போல
வீசன தருளு யிர்ப்பால் எய்தலால் இவனே யாவும்
ஆசற வறியு மென்றும் ஐந்தொழில் புரியு மென்றும்
பேசுத லுண்மை ஞானம் அன்றிது பிராந்தி ஞானம். (86)

மூங்கையாய்க் கொத்தை யாகி மூடவ னுயிடு மொருத்தன்
பாங்கொரு கழுது கண்ணிற் பகர்ந்திடல் பார்த்த லேகல்
ஆங்கதற் குளதா னுலும் யவையவன் பெருமை போல
ஈங்குயிர்க் குளது நல்கி இறைதொழி லியற்று மன்றே. (87)

நிலாவிய கலாதி தன்னல் நிகழ்தரு போத மென்றும்,
புலனறி வுறுவ தன்றிப் புலனறி வுண்ணு காணு
மலவிரு டுரந்த சுத்த வாய்மையே வடிவா யங்கண்
அலேவற நிற்க வின்ன வநுபவ முதிக்கு மன்றே. (88)

சுகமுத லுதிக்கு மென்றல் சோர்வுடைத் துண்மை சேர்ந்தோன்
சுகமுத லாவ தின்றித் தோன்றுவ தின்மை யென்னின்
அகமிகு நிலேயிற் றன்னே யறிவுரு னருளி னுந்தற்
றிகழ்வில தென்னிற் பெத்த முத்திக டெரித்த லின்றே. (89)

தத்துவ சால மொய்த்த சகலமுஞ் சார்வின் றன்னே
யொத்தகே வலமு நீக்கி யொழிவற நிறைந்து நின்ற
சுத்தபோ தத்தாற் றன்னேத் துறந்திடத் தோன்று முண்மை
யத்தொடத் துவித மாத லநுபவ நிலேய தன்றே. (90)

நேதிகள் கருவி பண்ணு நின்மல ஞானத் தாலே
நேதிகள் கருவி சாரின் நின்றது நேதி யாகா
நேதியோ டதுவு நாச மென்றிடின் நேய மார்க்கு
நேதிசெய் போதம் மாறி நின்றிடி னிகழு நேயம். (91)

ஓரியல் பற்ற போத முபாதிகட் குணர்வ தாகிச்
சாருமந் நிலேமை மாறித் தமநிலே விளங்குந் தீபஞ்
சூரியன் முன்பு நிற்ற லொத்திடச் சுத்தா னந்த
வாரிதி நிறைந்து விம்மி வரம்பறப் பெருகு மன்றே. (92)

சென்றுறு கேள்வி யோடு சிந்தனே தெளித னிட்டை
என்றுநான் கிவற்றி னிட்டை யெய்துமா றியம்பின் மூன்றால்
முன்றிகழ்ந் தின்ப மாகும் முழுமுத லின்மை யாகி
நின்றது போல மாறி நின்றிடில் ஞான நிட்டை. (93)

கேள்விசேர் பாச ஞானம் கிளர்பசு ஞானந் தன்னல்
தாழ்விலா வுண்மை ஞானத் தன்முத னன்னேச் சார்தற்
பாழிலே பரமா னந்தப் பயிர்விளேத் தளவு காணு
வாழ்விலா வாழ்வே நிட்டை யென்னும்மா மறைக டானே.

ஏலவிந் நிட்டை மாறு தெய்துதற் கரிதே யிங்கு
மேலிடுங் கருவி தன்னை வேறுசெய் தருளி னிற்றல்
சாலமுன் புகலு நிட்டை தகுமிரண் டினையுஞ் சாற்றல்
மூலகே வலமு மாயை முயங்குகே வலமும் போலும். (95)

கருதிடிற் கரண முண்டாங் கருத்தறின் மரண மெய்துங்
கருதிடா ததுநா னென்று கருதுவ னென்னி னீதான்
கருதிட வேண்டா வென்றுங் கருத்தினுக் கப்பா லானைக்
கருதிடார் உண்மை ஞானக் கண்டிறந் தவர்க டாமே. (96)

சென்றுறு நிறைவு குன்றுஞ் சிவனுனைச் சேரா நிற்பன்
என்றிடி லுள்ள தன்றாய் இறைவன்வந் தணுகல் நீபோய்
ஒன்றுத லிரண்டு மன்றி யுன்செல வவன் வரத்தாய்
நின்றிடா நிலையே ஞான நிட்டையாய் நிகழ்த்து நூலே. (97)

மாறற மயக்கி வந்த மலச்செல வதனின் வந்த
வேறுறு மின்ப வெள்ள வேதகந் தன்னி லுண்மைப்
பேறொடு பெறுதி சென்ற பெருமையா மொழிவை வானுட்
காறலை கண்க டந்தா னெனுமுரை கடுக்கு மன்றே. (98)

ஏகமா யிரண்டா யேக மாகுமே யியாவு மேகம்
ஏகமன் றிரண்டா யேக மாமெனி லேக மின்றி
ஏகமற் றிருமை யேயாம் என்னிலத் துவித மெய்தா
தேகமே யிரண்டி லாமைக் காணவ மிசையு மன்றே. (99)

மோசனம் பார மென்னில் நித்தமுன் மொழித லின்று
மோசனம் இன்மை யாகில் முத்தியு மின்மை யாகும்
மோசன மடைத றீபம் முன்னிரு ளிருமை போலும்
மோசனம் நித்த மென்று மொழிகுவர் முத்தி சித்தர். (100)

அவுத்திரி யதனி னாச முன்வினை யாகத் தோடே
தவிர்ப்புறு நின்ற கன்மஞ் சார்தரு வினையுண் டேலுற்
பவித்திடா தருளின் மாளும் பான்மையே தென்னில் வன்னிச்
சுவர்க்கணி லேழு தாக்குத் தூரியத் தொழில தாமே. (101)

உடறிரி கின்ற திங்கள் உறைவிட மெரியின் வெந்த
படமடி கும்ப கர்ண பணியறு திகிரிப் பான்மை
விடுதிசெய் வருண மைந்தும் விதிப்படி யருளான் மாறி
நடுநிலை விளங்க நிற்க நின்றது நசிக்கு மென்றே. (102)

இருள்வலி இருளது ஈசன் அருளுயி ரென்னு மைந்தின்
பொருடெரி காலை யொன்று போய்விளை விக்கு மற்றொன்
றருள்செறி சிவமுன் னுக்கி யாகியோ டருள்கீ ழிட்டுத்
தெருளுயிர் பொதுவி லாக்கிச் சிவம்விளை விக்கு மன்றே.

நமவினை யத்த னுப்பணி னிதக்கின்ற கமலர் தாக்கி
... ... வாசி யளித்திடு மதுவும் அற்று
சிவமய மதாக்கி யுற்றுச் சியவற விழுந்து முன்னர்த்
நமனிலை சார்ந்து நிற்றல் சத்திய வருணந் தானே. (104)

செலவறு சிய்ய தாகுஞ் செலவறு சேர்வாய்ச் சேறல்
நிலவிய வாயவ் வின்பி னிறைவது நிறைவுக் கன்மை
யிலதென விரண்டு மற்ற லின்னவா மினிய மேன்மேல்
உலைவற லம்ம வென்றே யுணர்த்துவ தெழுத்தி னுண்மை.

சிய்யது சிருட்டி வாவே திதியவ்வே யழிவு நவ்வே
யையமில் திரோத மவ்வே யருளநு பவந டத்தில்
உய்யவஞ் செழுத்தி னுண்மைத் தொழில்களைந் தினையு மாறு
துய்யுமா றுயிர்க்குச் செய்த லிதென வுணர்ந்து கொள்ளே.

பொறிபுல னுதி போக்கிப் போக்குடன் வினையைப் பாற்றிச்
செறியிருட் கிடைய கன்று சிற்பரை யாகி ஞேயத்
தறிவெலா மின்ப மாக வின்பெலா மறிவாய் நிற்பர்
பிறிவிலாத் துவித வுண்மை பேறுபெற் றவர்க டாமே.

ஆசனஞ் செபந் தவமாம் அருச்சனை விரதங் காலம்
தேசமோ ரிடங்கு றித்தல் திக்கொடு தான மியாவும்
நாசமோ டியற்ற லற்று ஞாதுரு ஞேய மாதல்
பேசிடி னுறங்கு வோர்கைப் பொருளொழி பெற்றி யாமே.

உள்ளொடு புறம்பே தென்ன உற்றபூ சனையி ரண்டும்
மெள்ளவே நழுவ வங்கண் மலமிலா வேகத் தார்த்திட்
டெள்ளுமா றிலாத் ஞேய மாகவே யின்ப மான
நள்ளொடு கீழ்மேல் விம்மி நவையில ராவ ரன்றே. (109)

மங்குலின் மன்ன யாவும் யாவையுமங் குன்னி மன்னி
யெங்குமாய் நிற்றல் போல இறையருண் ஞான மெங்கும்
கங்கற நிறைத லான்மெய்ப் பார்வையிற் பார்த்த வெல்லாம்
சங்கர னுருவ மாக்கித் தாமற வளர்வ ரன்றே. (110)

தரைமுதல் கருவி யாவும் சடமென வுணர்ந்து ஞானம்
பரையினின் றெவையும் உண்மைப் பார்வையி லழீஇப் பஞ்ச
... ... தருளான் மாறி வரையறு சிவமே யாகுங்
கரையிலா ஞான பூசை கைவிடார் மெய்வி டாதார். (111)

கண்டது சடமாக் காணும் கருத்தினை யதம மாகக்
கொண்டது கழன்ற காணுக் காட்சிமத் திமத்திற் கூட்டி
யுண்டெனு மிவை யிறந்த வுத்தம ரிளைய தான
தொண்டிலத் துவித மாவர் தலைவறு துகளி லோரே. (112)

ஈசனு மீச னன்பர் வேடமு மிருமை நல்குந்
தேசிக னுருவு முண்மைச் சிவமென வுருகி நெக்குப்
பேசுதல் குழற வன்பு பெருகிட விழிநீர் பொங்க
ஆசற வழிவ ரின்ப வநுபவ மளவி லோரே. (113)

பெத்தமு முத்தி தானும் பேசிடின் முன்னும் பின்னும்
ஒத்தல காய தாதி யுணர்கிலன் றுய மித்தை
வித்தகர் நூலுக் கெட்டா விமலவே தாந்த மாகி
நித்தமா யுளதா மொன்றை நிகழ்த்திடு மிந்நூ லன்றே.(114)

இந்தநூ லுணர்த்து மெல்லை யருளளித் தேது நாடி
முந்திய வுவமை நான்கு முறைமையிற் கண்டு முன்பின்
வந்தவா றெக்க நோக்கி மலைவற மயக்கந் தீரச்
சிந்தைவைப் பவர்பா லுண்மை தெளிதரத் தெருட்ட லாமே.

திருநெறி விளக்க மென்னச் சிவாகமத் தெய்வ நூலின்
பெருமையைச் சிறுமை யாக்கிப் பிழைப்புவாய்ப் பறியா நாயேன்
அருளெனும் பித்து மேலிட் டறைந்தனன் அங்க ணைக்கண்
வருபகீ ரதிபோ லிந்நூல் மதிப்பர்நன் மதிபெற் றோரே.

வெண்பா

வாழிபுகழ்க் காழிநகர் வாழிதிருத் தண்டைக்கால்
வாழிதிருக் கண்ணுடைய வள்ளல்தாள்—வாழி
சுருதி தொடர்ந்தபெருந் தோணியிறை வாழி
திருநெறிக் கான திரள்.

திருச்சிற்றம்பலம்

திருநெறி விளக்கம் முற்றிற்று.

—இராம. கோவிந்தசாமி பிள்ளை

——

உ
சிவமயம்



## ஸ்ரீ மருந்தீசுவரஸ்வாமி தேவாலய

# அஷ்டபந்தன கும்பாபிஷேகத் திருப்பணிக் குழு

**திருவான்மியூர்,** **சென்னை-20**

சென்னையின் தெற்கேயுள்ள திருவான்மியூர் தமிழகத்திலுள்ள மிகப் பழமையான சிவத்தலம். நாயன்மார்களாலும், ஸ்ரீ அருணகிரிநாதராலும், ஸ்ரீ அப்பய்ய தீட்சதராலும் போற்றப்பெற்றது. ஸ்ரீ மருந்தீசுவரர் இங்கு ஸ்வயம்புலிங்கமாய் எழுந்தருளியிருக்கிறார். இத்தலத்தில் வான்மீமி முனிவர் ஸ்ரீ தியாகேசரின் திருநடனம் காணும் பேறு பெற்றார். இங்குள்ள பழம்பெருங் கோயில் சிறந்த சிற்ப வேலைப்பாடுகளும் பழங்காலக் கல்வெட்டுக்களும் நிறைந்துள்ளது. இக்கோயிலைப் பழுதுபார்த்து அஷ்டபந்தன கும்பாபிஷேகமும், நாயன்மார்களின் நூதன பிரதிஷ்டையும் 23—1—1961 (சார்வரி௵ தைமீ" 10௳) நடத்துவதாக, இறைவன் அருளை முன்னிட்டுத் தீர்மானிக்கப்பெற்றிருக்கிறது. இக் கைங்கரியங்களுக்கு உதவிபுரிய விரும்பும் பக்தர்கள், கமிட்டி டிரஷரர் அவர்களுக்கு நன்கொடைகளை அனுப்பி ஸ்ரீ மருந்தீசுவரரின் அருளுக்கு உரியவர்களாக மிகவும் வேண்டுகிறோம்.

| | | |
|---|---|---|
| T. S. சுவாமிநாத அய்யர், | K. விநாயகம், B.A., B.L., | T. N. உமாபதி தேசிகர், |
| டிரஸ்டி. | பிரஸிடெண்டு. | டிரஷரர். |

சாது அச்சுக்கூடம், சென்னை-4

சிவஞான போத வகுப்பு: சென்னை, தியாகராய நகர், உஸ்மான் ரோட்டிலுள்ள தருமபுர ஆதின மடாலய தேவார சமயப் பிரசார நிலையத்தில், சித்தாந்த சிகாமணி - க. வச்சிரவேல் முதலியார், பி.ஏ., எல்.டி. அவர்களால் சிவஞானபோத வகுப்புக்கள், பிரதிமாதம் முதல் ஞாயிற்றுக்கிழமை தவிர மற்றைய ஞாயிறுகளில், மாலை 4 மணி முதல் 6 மணிவரை சில மாதங்களாக நடந்து வருகின்றன. சிவஞான முனிவர் சிற்றுரையைத் தழுவி விளக்கம் செய்யப்பட்டுவருகிறது. தற்போது ஒன்பதாம் சூத்திரம் நடைபெறுகிறது. எட்டு முதல் பன்னிரண்டு சூத்திரங்கள் மிகவும் முக்கியமானவை. இவ்வரிய விளக்க வகுப்புக்களைச் சமாஜ அங்கத்தினர்களும், சித்தாந்தத்தில் பற்றுடைய யாவரும் பெருவாரியாகப் பயன்படுத்திக்கொள்வது நல்லது. இவ்வாய்ப்பு மீண்டும் கிடைப்பது அரிது.

அன்பர்பணி மன்றம்: வாழ்க்கையினின்றும் ஓய்வு பெற்றுச் சாந்தியை நாடும் முதியவர்களுக்கும், தவ முயற்சியாளர்களுக்கும், மற்றும் தக்கோர்களுக்கும், இறை வழிபாடுகள் இயற்றவும் ஞானப்பேறு எய்தும் பயிற்சிகளைச் செய்யவும் ஏற்ற வசதிகள், உணவு, உறையுள், மருத்துவம், நல்லோர் உடனுறைவு, பாதுகாப்பு முதலிய அன்றாடத் தேவைகளை நவீன முறைச் சௌகரியங்களுடன் கூட்டுறவு முறையில் அமைத்துக் கொடுத்துப் பணி செய்வதே அன்பர்பணி மன்றத்தின் தலையாய நோக்கமாகும். நாளிது சார்வரி வருடம், மாசிமாதம், இரண்டாம் தேதி, மகா சிவராத்திரியிற் சிவபூசகர் மாநாட்டிலிருந்து துவங்கி இந்த அன்பர்பணி மன்றம் பணியாற்றி வரும். இம் மன்றம்பற்றிய செய்தி விளக்கங்களை அறிந்து கொள்ள விரும்புவோர், "திரு. டி. எம். தங்கவேலுப் பிள்ளை, அன்பர்பணி நிலையம், வல்லம், வல்லம் P.O., செங்கற்பட்டு" என்னும் முகவரிக்கு 25 ந.பை. தபால்தலை அனுப்பி, எழுதிக் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம்.

கார்த்திகை விளக்கீட்டு விழா: 2-12-60 வெள்ளிக்கிழமையன்று மாலை தருமையாதீன சமயப் பிரசார நிலையத்தில் செந்தமிழ்ச்செல்வர் வாகீச கலாநிதி திரு கி. வா. ஜகந்நாதன், எம்.ஏ. அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அது போது, புலவர் முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல். அவர்கள் கார்த்திகை விளக்கீடு பற்றிச் சங்க இலக்கியங்களில் வந்துள்ள குறிப்புக்களையெல்லாம் திரட்டித் தொகுத்துக்கூறி

விளக்கினார்கள். சைவப் பெரியார் ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் 'அடிமுடி தேடிய வரலாறு' பற்றிய தத்துவ நுட்பங்களை விளக்கிப் பேசினார்கள். தலைவர் அவர்கள் 'குன்றின்மேல் இட்ட விளக்கு' 'குடத்துள் இட்ட விளக்கு' 'சோதியே சுடரே சூழொளி விளக்கே' எனவரும் தொடர்களை அழகுற விளக்கி மகிழ்வித்தார்கள். ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளின் நன்றியுரையுடன் கூட்டம் முடிவுற்றது.

திருக்கடவூர்ச் சோமவாரப் பிரசாதம் வழங்கும் விழா : 6-12-60 செவ்வாயன்று மாலை சமயப்பிரசார நிலையத்தில் நடைபெற்றது. நமது சமாஜச் செயலாளரும் ஆட்சிமொழித் தனி அலுவலரும் ஆகிய திரு. கீ. இராமலிங்கனார், எம்.ஏ. அவர்கள் விழாவுக்குத் தலைமை தாங்கித் திருக்கடவூர் அபிராமி அம்மையின் அருட்சிறப்புக்களையெல்லாம் விரித்துரைத்தார்கள். அபிராமி அந்தாதி, வீரைக் கவிராச பண்டிதரின் சௌந்தரிய லகரி முதலிய நூல்களில் இருந்து பல செய்யுட்களை அவர்கள் சுவைபெருகவும் நயம் அமையவும் விளக்கிய திறன் அனைவரையும் மகிழ்வித்தது. ஸ்ரீலஸ்ரீ தம்பிரான்சுவாமி நன்றியுரை வழங்கினார்கள்.

குருபூசை விழா : சைவமும் தமிழும் தழைக்கத் தொண்டாற்றிய மாபெருஞ் சான்றோர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் பெருமான் அவர்களின் குருபூசை விழா 9-12-60 வெள்ளியன்று சிதம்பரத்தில் நடைபெற்றது. அன்று மாலை ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் உயர்நிலைப் பள்ளி மண்டபத்தில் சித்தாந்தப் பேராசிரியர் திரு. சபா. பிரகாசம் பிள்ளை அவர்கள் தலைமையில், சென்னைக் கிறித்தவக் கல்லூரியின் தமிழ்த் துறைத் தலைவர், பேராசிரியர் திரு. பூ. ஆலாலசுந்தரஞ் செட்டியார் எம்.ஏ. அவர்கள், ஸ்ரீலஸ்ரீ நாவலர் அவர்களின் அருமை பெருமைகளைப் பாராட்டிச் சிறப்புச் சொற்பொழிவாற்றினார்கள். பிறகு பல கலை நிகழ்ச்சிகளுக்குப்பின், நன்றியுரையுடன் விழா இனிது நிறைவேறிற்று.

Printed at the Sadhu Press, 15, Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4.

